18 பகையை மறைக்கிறவன் பொய் உதடன்; புறங்கூறுகிறவன் மதிகேடன்.
19 சொற்களின் மிகுதியில் பாவமில்லாமற்போகாது, தன் உதடுகளை அடக்குகிறவனோ புத்திமான்.
20 நீதிமானுடைய நாவு சுத்தவெள்ளி, துன்மார்க்கனுடைய மனம் அற்பவிலையும் பெறாது.
21 நீதிமானுடைய உதடுகள் அநேகரைப் போஷிக்கும், மூடரோ மதியீனத்தினால் மாளுவார்கள்.
22 கர்த்தரின் ஆசீர்வாதமே ஐசுவரியத்தைத் தரும், அதனோடே அவர் வேதனையைக் கூட்டார்.
23 தீவினைசெய்வது மூடனுக்கு விளையாட்டு, புத்திமானுக்கோ ஞானம் உண்டு.
24 துன்மார்க்கன் பயப்படும் காரியம் அவனுக்கு வந்து நேரிடும், நீதிமான் விரும்புகிற காரியம் அவனுக்குக் கொடுக்கப்படும்.
25 சுழல்காற்று கடந்துபோவதுபோல் துன்மார்க்கன் கடந்துபோவான், நீதிமானோ நித்திய அஸ்திபாரமுள்ளவன்.
26 பற்களுக்குக் காடியும், கண்களுக்குப் புகையும் எப்படியிருக்கிறதோ, அப்படியே சோம்பேறியும் தன்னை அனுப்புகிறவர்களுக்கு இருக்கிறான்.
27 கர்த்தருக்குப் பயப்படுதல் ஆயுசுநாட்களைப் பெருகப்பண்ணும், துன்மார்க்கருடைய வருஷங்களோ குறுகிப்போம்.
28 நீதிமான்களின் நம்பிக்கை மகிழ்ச்சியாகும், துன்மார்க்கருடைய அபேட்சையோ அழியும்.
29 கர்த்தரின் வழி உத்தமர்களுக்கு அரண், அக்கிரமக்காரருக்கோ கலக்கம்.
30 நீதிமான் என்றும் அசைக்கப்படுவதில்லை, துன்மார்க்கர் பூமியில் வசிப்பதில்லை.
31 நீதிமானுடைய வாய் ஞானத்தை வெளிப்படுத்தும், மாறுபாடுள்ள நாவோ அறுப்புண்டுபோம்.
32 நீதிமான்களுடைய உதடுகள் பிரியமானவைகளைப் பேச அறியும், துன்மார்க்கருடைய வாயோ மாறுபாடுள்ளது.

## 11. அதிகாரம்.

1 கள்ளத்தராசு கர்த்தருக்கு அருவருப்பானது, சுமுத்திரையான நிறைகல்லோ அவருக்குப் பிரியம்.

அகந்தை வந்தால் இலச்சையும் வரும்; 2
தாழ்ந்த சிந்தையுள்ளவர்களிடத்தில் ஞா
னம் உண்டு.
செம்மையானவர்களுடைய உத்தமம் 3
அவர்களை நடத்தும், துரோகிகளின் மாறு
பாடோ அவர்களைப் பாழாக்கும்.
கோபாக்கினைநாளில் ஐசுவரியம் உத 4
வாது, நீதியோ மரணத்துக்குத் தப்புவிக்
கும்.
உத்தமனுடைய நீதி அவன் வழியைச் 5
செம்மைப்படுத்தும், துன்மார்க்கனோ தன்
துன்மார்க்கத்தினால் விழுவான்.
செம்மையானவர்களுடைய நீதி அவர் 6
களைத் தப்புவிக்கும், துரோகிகளோ தங்
கள் தீவினையிலே பிடிபடுவார்கள்.
துன்மார்க்கன் மரிக்கும்போது அவன் 7
நம்பிக்கை அழியும், அக்கிரமக்காரரின்
அபேட்சை கெட்டுப்போம்.
நீதிமான் இக்கட்டினின்று விடுவிக்கப் 8
படுவான், இவன் இருந்த இடத்திலே
துன்மார்க்கன் வருவான்.
மாயக்காரன் தனக்கு அடுத்தவனை வா 9
யினால் கெடுக்கிறான், நீதிமானோ அறிவி
னால் தப்புகிறான்.
நீதிமான்கள் நன்றாயிருந்தால் பட்ட 10
ணம் களிகூரும், துன்மார்க்கர் அழிந்தால்
கெம்பீரம் உண்டாகும்.
செம்மையானவர்களுடைய ஆசீர்வாத 11
த்தினால் பட்டணம் நிலைபெற்றோங்கும்,
துன்மார்க்கருடைய வாயினால் அது இடி
ந்துவிழும்.
மதிகெட்டவன் பிறனை அவமதிக்கி 12
றான், புத்திமானோ தன் வாயை அடக்கிக்
கொண்டிருக்கிறான்.
புறங்கூறித் திரிகிறவன் இரகசியத்தை 13
வெளிப்படுத்துகிறான், ஆவியில் உண்
மையுள்ளவனோ காரியத்தை அடக்குகி
றான்.
ஆலோசனையில்லாத இடத்தில் ஜனங் 14
கள் விழுந்துபோவார்கள், அநேக ஆலோ
சனைக்காரர் உண்டானால் சுகம் உண்டா
கும்.
அந்நியனுக்காகப் பிணைப்படுகிறவன் 15
வெகு பாடுபடுவான், பிணைப்படுவதை
வெறுப்பவன் சுகமாயிருப்பான்.
நல்லொழுக்கமுள்ள ஸ்திரீ மானத்தைக் 16
காப்பாள், பராக்கிரமசாலிகள் ஐசுவரியத்
தைக் காப்பார்கள்.
தயையுள்ள மனுஷன் தன் ஆத்துமாவு 17

க்குநன்மைசெய்துகொள்ளுகிறான், கரேனோ தன் உடலை அலைக்கழிக்கிறான்.

18 துன்மார்க்கன் விருதாவேலையைச் செய்கிறான், நீதியை விதைக்கிறவனோ மெய்ப்பலனைப் பெறுவான்.

19 நீதி ஜீவனுக்கு ஏதுவாகிறதுபோல, தீமையைப் பின்தொடருகிறவன் மரணத்துக்கு ஏதுவாகிறான்.

20 மாறுபாடுள்ள இருதயமுடையவர்கள் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள், உத்தம மார்க்கத்தாரோ அவருக்குப் பிரியமானவர்கள்.

21 கையோடே கைகோர்த்தாலும் துஷ்டன் தண்டனைக்குத் தப்பான், நீதிமான்களுடைய சந்ததியோ விடுவிக்கப்படும்.

22 மதிகேடாய் நடக்கிற அழகுள்ள ஸ்திரீ, பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்குச் சமானம்.

23 நீதிமான்களுடைய ஆசை நன்மையே, துன்மார்க்கருடைய நம்பிக்கையோ கோபாக்கினையாய் முடியும்.

24 வாரியிறைத்தும் விருத்தியடைவாரும் உண்டு, அதிகமாய்ப் பிசினித்தனம்பண்ணியும் வறுமையடைவாரும் உண்டு.

25 உதாரகுணமுள்ள ஆத்துமா செழிக்கும், எவன் தண்ணீர் பாய்ச்சுகிறானோ அவனுக்குத் தண்ணீர் பாய்ச்சப்படும்.

26 தானியத்தைக் கட்டிவைக்கிறவனை ஜனங்கள் சபிப்பார்கள், விற்கிறவனுடைய தலையின்மேல் ஆசீர்வாதம் தங்கும்.

27 நன்மையை ஜாக்கிரதையுடன் தேடுகிறவன் தயையைப் பெறுவான், தீமையைத் தேடுகிறவனுக்கோ தீமையே வரும்.

28 தன் ஐசுவரியத்தை நம்புகிறவன் விழுவான், நீதிமான்களோ துளிரைப்போலே தழைப்பார்கள்.

29 தன் வீட்டைக் கலைக்கிறவன் காற்றைச் சுதந்தரிப்பான், மூடன் ஞானமுள்ளவனுக்கு அடிமையாவான்.

30 நீதிமானுடைய பலன் ஜீவவிருட்சம், ஆத்துமாக்களை ஆதாயப்படுத்திக்கொள்ளுகிறவன் ஞானமுள்ளவன்.

31 இதோ, நீதிமானுக்குப் பூமியில் சரிக்கட்டப்படுமே, துன்மார்க்கனுக்கும் பாவிக்கும் எத்தனை அதிகம்.

## 12. அதிகாரம்.

1 புத்திமதிகளை விரும்புகிறவன் அறிவை விரும்புகிறான், கடிந்துகொள்ளுதலை வெறுக்கிறவனோ மிருககுணமுள்ளவன்.

நல்லவன் கர்த்தரிடத்தில் தயைபெறு 2
வான், துர்சிந்தனைகளுள்ள மனுஷனை
அவர் ஆக்கினைக்குட்படுத்துவார்.

துன்மார்க்கத்தினால் மனுஷன் நிலைவ 3
ரப்படான், நீதிமான்களுடைய வேரோ
அசையாது.

குணசாலியான ஸ்திரீ தன் புருஷனுக் 4
குக் கிரீடமாயிருக்கிறாள், இலச்சை உண்
டுபண்ணுகிறவளோ அவனுக்கு எலும்பு
ருக்கியாயிருக்கிறாள்.

நீதிமான்களுடைய நினைவுகள் நியாய 5
மானவைகள், துன்மார்க்கருடைய
ஆலோசனைகளோ சூதானவைகள்.

துன்மார்க்கரின் வார்த்தைகள் இரத்தஞ் 6
சிந்தப் பதிவிருப்பதைப்பற்றியது, உத்த
மர்களுடைய வாயோ அவர்களைத் தப்பு
விக்கும்.

துன்மார்க்கர் கவிழ்க்கப்பட்டு ஒழிந்து 7
போவார்கள், நீதிமான்களுடைய வீடோ
நிலைநிற்கும்.

தன் புத்திக்குத் தக்கதாக மனுஷன் புக 8
ழப்படுவான், மாறுபாடான இருதயமுள்
ளவனோ இகழப்படுவான்.

ஆகாரமில்லாதவனாயிருந்தும், தன்னைத் 9
தான் கனம்பண்ணிக்கொள்ளுகிறவனைப்
பார்க்கிலும், கனவீனனாயிருந்தும் பணி
விடைக்காரனுள்ளவன் உத்தமன்.

நீதிமான் தன் மிருகஜீவனைக் காப்பாற் 10
றுகிறான், துன்மார்க்கருடைய இரக்கமும்
கொடுமையே.

தன் நிலத்தைப் பயிரிடுகிறவன் ஆகார 11
த்தினால் திருப்தியடைவான், வீணரைப்
பின்பற்றுகிறவனோ மதியற்றவன்.

துன்மார்க்கன் துஷ்டருடைய வலையை 12
விரும்புகிறான், நீதிமானுடைய வேர் கனி
கொடுக்கும்.

துன்மார்க்கனுக்கு அவன் உதடுகளின் 13
துரோகமே கண்ணி, நீதிமானோ நெருக்
கத்தினின்று நீங்குவான்.

அவனவன் தன் தன் வாயின் பலனால் 14
திருப்தியடைவான், அவனவன் கைக்கிரி
யையின் பலனுக்குத்தக்கதாக அவனவ
னுக்குக் கிடைக்கும்.

மதியீனனுடைய வழி அவன் பார்வை 15
க்குச் செம்மையாயிருக்கும், ஆலோசனை
க்குச் செவிகொடுக்கிறவனோ ஞானமுள்
ளவன்.

16 மூடனுடைய கோபம் சீக்கிரத்தில் வெளிப்படும்; இலச்சையை மூடுகிறவனோ விவேகி.
17 சத்தியவாசகன் நீதியை வெளிப்படுத்துவான்; பொய்ச்சாட்சிக்காரனோ வஞ்சகத்தை வெளிப்படுத்துவான்.
18 பட்டயக்குத்துகள்போலப் பேசுகிறவர்களும் உண்டு; ஞானமுள்ளவர்களுடைய நாவோ ஔஷதம்.
19 சத்திய உதடு என்றும் நிலைத்திருக்கும்; பொய் நாவோ ஒரு நிமிஷமாத்திரம் இருக்கும்.
20 தீமையைப் பிணைக்கிறவர்களின் இருதயத்தில் இருக்கிறது கபடம்; சமாதானம் பண்ணுகிற ஆலோசனைக்காரருக்கு உள்ளது சந்தோஷம்.
21 நீதிமானுக்கு ஒரு கேடும் வராது; துன்மார்க்கரோ தீமையினால் நிறையப்படுவார்கள்.
22 பொய் உதடுகள் கர்த்தருக்கு அருவருப்பானவைகள்; உண்மையாய் நடக்கிறவர்களோ அவருக்குப் பிரியம்.
23 விவேகமுள்ள மனுஷன் அறிவை அடக்கிவைக்கிறான்; மூடருடைய இருதயமோ மதியீனத்தைப் பிரசித்தப்படுத்தும்.
24 ஜாக்கிரதையுள்ளவர்களுடைய கை ஆளுகைசெய்யும்; சோம்பேறியோ பகுதி கட்டுவான்.
25 மனுஷனுடைய இருதயத்திலுள்ள கவலை அதை ஒடுக்கும்; நல்வார்த்தையோ அதை மகிழ்ச்சியாக்கும்.
26 நீதிமான் தன் அயலானைப்பார்க்கிலும் மேன்மையுள்ளவன்; துன்மார்க்கருடைய வழியோ அவர்களை மோசப்படுத்தும்.
27 சோம்பேறி தான் வேட்டையாடிப்பிடித்ததைச் சமைப்பதில்லை; ஜாக்கிரதையுள்ளவனுடைய பொருளோ அருமையானது.
28 நீதியின் பாதையில் ஜீவன் உண்டு; அந்தப் பாதையில் மரணம் இல்லை.

## 13. அதிகாரம்.

1 ஞானமுள்ள மகன் தகப்பனுடைய போதகத்தைக் கேட்கிறான்; பரியாசக்காரனோ கடிந்துகொள்ளுதலுக்குச் செவிகொடான்.
2 மனுஷன் தன் வாயின் பலனால் நன்மையைப் புசிப்பான்; துரோகிகளின் ஆத்துமாவோ கொடுமையைப் புசிக்கும்.

தன் வாயைக் காக்கிறவன் தன் பிராணனைக் காக்கிறான்; தன் உதடுகளை விரிவாய்த் திறக்கிறவனோ கலக்கமடைவான். 3
சோம்பேறியுடைய ஆத்துமா விரும்பியும் ஒன்றும் பெறாது; ஜாக்கிரதையுள்ளவர்களுடைய ஆத்துமாவோ புஷ்டியாகும். 4
நீதிமான் பொய்ப்பேச்சை வெறுக்கிறான்; துன்மார்க்கனோ வெட்கமும் இலச்சையும் உண்டாக்குகிறான். 5
நீதி உத்தமமார்க்கத்தாரைத் தற்காக்கும்; துன்மார்க்கமோ பாவியைக் கவிழ்த்துப்போடும். 6
ஒன்றுமில்லாதிருக்கத் தன்னைச் செல்வனாகப் பாராட்டுகிறவனும் உண்டு; மிகுந்த செல்வமிருக்கத் தன்னைத் தரித்திரனாகப் பாராட்டுகிறவனும் உண்டு. 7
மனுஷனுடைய ஐசுவரியம் அவன் பிராணனை மீட்கும்; தரித்திரனோ மிரட்டுதலைக் கேளாதிருக்கிறான். 8
நீதிமான்களின் வெளிச்சம் சந்தோஷிப்பிக்கும்; துன்மார்க்கரின் தீபமோ அணைந்துபோம். 9
அகந்தையினால்மாத்திரம் வாது பிறக்கும்; ஆலோசனையைக் கேட்கிறவர்களிடத்திலோ ஞானம் உண்டு. 10
வஞ்சனையால் தேடின பொருள் குறைந்துபோம்; கைப்பாடாய்ச் சேர்க்கிறவனோ விருத்தி அடைவான். 11
நெடுங்காலமாய்க் காத்திருக்குதல் இருதயத்தை இளைக்கப்பண்ணும்; விரும்பினது வரும்போதோ ஜீவவிருட்சம்போல இருக்கும். 12
திருவசனத்தை அவமதிக்கிறவன் நாசமடைவான்; கற்பனைக்குப் பயப்படுகிறவனோ பலனடைவான். 13
ஞானவான்களுடைய போதகம் ஜீவஊற்று; அதினால் மரணக்கண்ணிகளுக்குத் தப்பலாம். 14
நற்புத்தி தயையை உண்டாக்கும்; துரோகிகளுடைய வழியோ கரடுமுரடானது. 15
விவேகியானவன் அறிவோடு நடந்துகொள்ளுகிறான்; மூடனோ தன் மூடத்தனத்தை வெளிப்படுத்துகிறான். 16
துரோகமுள்ள தூதன் தீதிலே விழுவான்; உண்மையுள்ள ஸ்தானாபதியோ ஔஷதம். 17
புத்திமதிகளைத் தள்ளுகிறவன் தரித்திர 18

தனத்தையும் இலச்சையையும் அடைவான்,
கடிந்துகொள்ளுதலைக் கவனித்து நடக்கி
றவனோ கனமடைவான்.
19 வாஞ்சை நிறைவேறுவது ஆத்துமா
வுக்கு இனிது, தீமையை விட்டு விலகு
வது மூடருக்கு அருவருப்பு.
20 ஞானிகளோடே சஞ்சரிக்கிறவன் ஞா
னமடைவான், மூடருக்குத் தோழனோ
நாசமடைவான்.
21 பாவிகளைத் தீவினை தொடரும், நீதிமான்
களுக்கோ நன்மை பலனாக வரும்.
22 நல்லவன் தன் பிள்ளைகளின் பிள்ளைகளு
க்குச் சுதந்தரம் வைத்துப்போகிறான், பா
வியின் ஆஸ்தியோ நீதிமானுக்காகச் சேர்த்
துவைக்கப்படும்.
23 ஏழைகளின் வயல் மிகுதியான ஆகார
த்தை விளைவிக்கும், நியாயம் கிடையாமல்
கெட்டுப்போகிறவர்களும் உண்டு.
24 பிரம்பைக் கையாடாதவன் தன் மக
னைப் பகைக்கிறான், அவன்மேல் அன்பா
யிருக்கிறவனோ அவனை ஏற்கனவே தண்டி
க்கிறான்.
25 நீதிமான் தனக்குத் திருப்தியாகப் புசிக்
கிறான், துன்மார்க்கருடைய வயிறோ பசி
த்திருக்கும்.

## 14. அதிகாரம்.

1 புத்தியுள்ள ஸ்திரீ தன் வீட்டைக் கட்டு
கிறாள், புத்தியில்லாத ஸ்திரீயோ தன் கை
களினால் அதை இடித்துப்போடுகிறாள்.
2 நிதானமாய் நடக்கிறவன் கர்த்தருக்குப்
பயப்படுகிறான், தன் வழிகளில் தாறுமா
றானவனோ அவரை அலட்சியம்பண்ணுகி
றான்.
3 மூடன் வாயிலே அவன் அகந்தைக்கே
ற்ற மிலாறுண்டு, ஞானவான்களின் உதடு
களோ அவர்களைக் காப்பாற்றும்.
4 எருதுகளில்லாத இடத்தில் களஞ்சி
யம் வெறுமையாயிருக்கும், காளைகளின்
பெலத்தினாலோ மிகுந்த வரத்துண்டு.
5 மெய்ச்சாட்சிக்காரன் பொய் சொல்
லான், பொய்ச்சாட்சிக்காரனோ பொய்
களை ஊதுகிறான்.
6 பரியாசக்காரன் ஞானத்தைத் தேடியும்
கண்டுபிடியான், புத்தியுள்ளவனுக்கோ
அறிவு லேசாய் வரும்.
7 மூடனுடைய முகத்துக்கு விலகிப்
போ, அறிவுள்ள உதடுகளை அங்கே கா
ணாய்.

தன் வழியைச் சிந்தித்துக்கொள்வது 8
விவேகியின் ஞானம், மூடர்களுடைய
வஞ்சனையோ மூடத்தனம்.
மூடர் பாவத்தைக்குறித்துப் பரியாசம் 9
பண்ணுகிறார்கள், நீதிமான்களுக்குள்ளே
தயை உண்டு.
இருதயத்தின் கசப்பு இருதயத்துக்கே 10
தெரியும், அதின் மகிழ்ச்சிக்கு அந்நியன்
உடந்தையாகான்.
துன்மார்க்கருடைய வீடு அழியும், செ 11
ம்மையானவனுடைய கூடாரமோ செழிக்
கும்.
மனுஷனுக்குச் செம்மையாய்த் தோன் 12
றுகிற வழி உண்டு, அதின் முடிவோ மரண
வழிகள்.
நகைப்பிலும் மனதுக்குத் துக்கமுண்டு, 13
அந்த மகிழ்ச்சியின் முடிவு சஞ்சலம்.
பின்வாங்கும் இருதயமுள்ளவன் தன் 14
வழிகளிலேயும், நல்ல மனுஷனோ தன்னி
லே தானும் திருப்தியடைவான்.
பேதையானவன் எந்த வார்த்தையை 15
யும் நம்புவான், விவேகியோ தன் நடை
யின்மேல் கவனமாயிருக்கிறான்.
ஞானமுள்ளவன் பயந்து தீமைக்கு வில 16
குகிறான், மதியீனனோ மூர்க்கங்கொண்டு
துணிகரமாயிருக்கிறான்.
முற்கோபி மதிகேட்டைச் செய்வான், 17
துர்ச்சிந்தனைக்காரன் வெறுக்கப்படுவான்.
பேதைகள் புத்தியீனத்தைச் சுதந்தரிக் 18
கிறார்கள், விவேகிகளோ அறிவினால் முடி
சூட்டப்படுகிறார்கள்.
தீயோர் நல்லோருக்கு முன்பாகவும், 19
துன்மார்க்கர் நீதிமான்களுடைய வாசற்ப
டிகளிலும், குனிவதுண்டு.
தரித்திரன் தனக்கடுத்தவனாலும் பகை 20
க்கப்படுகிறான், ஐசுவரியவானுக்கோ அ
நேக சிநேகிதருண்டு.
பிறனை அவமதிக்கிறவன் பாவஞ்செய் 21
கிறான், தரித்திரனுக்கு இரங்குகிறவனோ
பாக்கியமடைவான்.
தீமையை யோசிக்கிறவர்கள் தவறுகி 22
றார்களல்லவோ? நன்மையை யோசிக்
கிறவர்களுக்கோ கிருபையும் சத்தியமு
முண்டு.
சகல பிரயாசத்திலும் பிரயோஜனமு 23
ண்டு, உதடுகளின் பேச்சோ வறுமையை
மாத்திரம் தரும்.
ஞானிகளுக்கு முடி அவர்கள் செல் 24
வம், மூடரின் மதியீனம் மூடத்தனமே.

25 மெய்ச்சாட்சி சொல்லுகிறவன் உயிர்
களை இரட்சிக்கிறான், வஞ்சனைக்காரனோ
பொய்களை ஊதுகிறான்
26 கர்த்தருக்குப் பயப்படுகிறவனுக்குத்
திடநம்பிக்கை உண்டு, அவன் பிள்ளைகளு
க்கும் அடைக்கலம் கிடைக்கும்
27 கர்த்தருக்குப் பயப்படுதல் ஜீவஊற்று,
அதினால் மரணக்கண்ணிகளுக்குத் தப்ப
லாம்
28 ஜனத்திரட்சி ராஜாவின் மகிமை, ஜனக்
குறைவு தலைவனின் முறிவு
29 நீடியசாந்தமுள்ளவன் மகா புத்திமான்,
முற்கோபியோ புத்தியீனத்தை விளங்கப்
பண்ணுகிறான்
30 சொஸ்தமனம் உடலுக்கு ஜீவன், பொ
றாமையோ எலும்புருக்கி
31 தரித்திரனை ஒடுக்குகிறவன் அவனை உண்
டாக்கினவரை நிந்திக்கிறான், தரித்திரனுக்
குத் தயைசெய்கிறவனோ அவரைக் கனம்
பண்ணுகிறான்
32 துன்மார்க்கன் தன் தீமையிலே வாரிக்
கொள்ளப்படுவான், நீதிமானோ தன் மர
ணத்திலே நம்பிக்கையுள்ளவன்
33 புத்திமானுடைய இருதயத்தில் ஞானம்
தங்கும், மதியீனரிடத்தில் உள்ளதோ வெ
ளிப்படும்
34 நீதி ஜனத்தை உயர்த்தும், பாவமோ
எந்த ஜனத்துக்கும் இகழ்ச்சி
35 ராஜாவின் தயை விவேகமுள்ள பணிவி
டைக்காரன்மேலிருக்கும், அவனுடைய
கோபமோ இலச்சையுண்டாக்குகிறவன்
மேலிருக்கும்

## 15. அதிகாரம்.

1 மெதுவான பிரதியுத்தரம் உக்கிரத்தை
மாற்றும், கடுஞ்சொற்களோ கோபத்தை
எழுப்பும்
2 ஞானிகளின் நாவு அறிவை உபயோகப்
படுத்தும், மூடரின் வாயோ புத்தியீனத்
தைக் கக்கும்
3 கர்த்தரின் கண்கள் எவ்விடத்திலுமிரு
ந்து, நல்லோரையும் தீயோரையும் நோக்
கிப்பார்க்கிறது
4 ஆரோக்கியமுள்ள நாவு ஜீவவிருட்சம்,
நாவின் மாறுபாடோ ஆவியை நொறுக்
கும்
5 மூடன் தன் தகப்பன் புத்தியை அலட்
சியம்பண்ணுகிறான், கடிந்துகொள்ளுத
லைக் கவனித்து நடக்கிறவனோ விவேகி
நீதிமானுடைய வீட்டில் அதிக பொக்கி 6
ஷமுண்டு, துன்மார்க்கனுடைய வருமா
னத்திலோ துன்பமுண்டு
ஞானிகளின் உதடுகள் அறிவை இறை 7
க்கும், மூடரின் இருதயமோ அப்படிய
ல்ல.
துன்மார்க்கருடைய பலி கர்த்தருக்கு 8
அருவருப்பானது, செம்மையானவர்க
ளின் ஜெபமோ அவருக்குப் பிரியம்
துன்மார்க்கனுடைய வழி கர்த்தருக்கு 9
அருவருப்பானது, நீதியைப் பின்பற்றுகிற
வனையோ அவர் நேசிக்கிறார்
வழியைவிட்டு விலகுகிறவனுக்குப் புத் 10
திமதி விசனமாயிருக்கும், கடிந்துகொள்
ளுதலை வெறுக்கிறவன் சாவான்
பாதாளமும் அழிவும் கர்த்தரின் பார் 11
வைக்குப் பிரத்தியட்சமாயிருக்க, மனுபு
த்திரருடைய இருதயம் அதிக பிரத்தியட்
சமாயிருக்குமல்லவோ?
பரியாசக்காரன் தன்னைக் கடிந்துகொ 12
ள்ளுகிறவனை நேசியான், ஞானவான்களி
டத்தில் போகவுமாட்டான்
மனமகிழ்ச்சி முகமலர்ச்சியைத் தரும், 13
மனோதுக்கத்தினாலே ஆவி முறிந்துபோம்
புத்திமானுடைய மனம் அறிவைத் தே 14
டும், மூடரின் வாயோ மதியீனத்தை மே
யும்
சிறுமைப்பட்டவனுடைய நாட்களெ 15
ல்லாம் தீங்குள்ளவைகள், மனரம்மிய
மோ நித்திய விருந்து
சஞ்சலத்தோடு கூடிய அதிகப் பொரு 16
ளிலும், கர்த்தரைப் பற்றும் பயத்தோடு
கூடிய கொஞ்சப்பொருளே உத்தமம்
பகையோடிருக்கும் கொழுத்த எருதின் 17
கறியைப்பார்க்கிலும், சிநேகத்தோடிருக்
கும் இலைக்கறியே நல்லது
கோபக்காரன் சண்டையை எழுப்புகி 18
றான், நீடியசாந்தமுள்ளவனோ சண்டை
யை அமர்த்துகிறான்
சோம்பேறியின் வழி முள்வேலிக்குச் 19
சமானம், நீதிமானுடைய வழியோ ராஜ
பாதை
ஞானமுள்ள மகன் தகப்பனைச் சந்தோ 20
ஷப்படுத்துகிறான், மதியற்ற மனுஷனோ
தன் தாயை அலட்சியம்பண்ணுகிறான்
மூடத்தனம் புத்தியீனனுக்குச் சந்தோ 21
ஷம், புத்திமானோ தன் நடக்கையைச்
செம்மைப்படுத்துகிறான்
ஆலோசனையில்லாமையால் எண்ணங் 22

கள சிததியாமறபோம, ஆலோசனைககாரா
அநேகா இருநதால அவைகள உறுதிபப
டும
23 மனுஷனுககுத தன வாயமொழியினலே
மகிழசசியுணடாகும, ஏறறகாலததில
சொனன வாாததை எவவளவு நலலது'
24 கீழான பாதாளததை விடடு விலகும
படி, விவேகிககு மேலவழியானது உனன
ததைச சோககும வழியாம
25 அகஙகாாியின வீடடைக காததா பிடு
ஙகிபபோடுவாா, விதவையின எலலையை
யோ நிலைபபடுததுவாா
26 துஙடமாாககருடைய நினைவுகள காதத
ருககு அருவருபபானவைகள, சுததவான
களுடைய வாாததைகளோ இனபமான
வைகள
27 பொருளாசைககாரன தன வீடடைக
கலககிறுன, பரிதானஙகளை வெறுககிறவ
னே பிழைபபான
28 நீதிமானுடைய மனம பிரதியுததரம சொ
லல யோசிககும, துனமாாககனுடைய
வாயோ தீமைகளைக கொபபளிககும
29 துனமாாககருககுக காததா தூரமாயி
ருககிருா நீதிமானகளின ஜெபததையோ
கேடகிருா
30 கணகளின ஒளி இருதயததைப பூரிப
பாககும, நறசெயதி எலுமபுகளைப புஷ
டியாககும
31 ஜீவனுககேதுவான கடிநதுகொளளு
தலை லதலுககொளளும காது ஞானிகளி
டததே தஙகும
32 புததிமதியைத தளளிவிடுகிறவன தன
ஆததுமாவை வெறுககிறுன, கடிநதுகொ
ளளுதலைக கேடகிறவனே ஞானமடை
வான
33 காத்தருககுப பயபபடுதல ஞானத
தைப போதிககும, மேனமைககு முனனு
னது தாழமை

## 16 அதிகாரம்.

1 மனதின யோசனைகள மனுஷனுடை
யது, நாவின பிரதியுததரம காததரால்
வரும
2 மனுஷனுடைய வழிகளெலலாம அ
வன பாாவைககுச சுததமானவைகள,
காததரோ ஆவிகளை நிறுததுபபாாககிருா
3 உன செயகைகளைக காததருக்கு ஒப
புவி, அபபொழுது உன யோசனைகள
உறுதிபபடும

கர்த்தா சகலததையும தமககெனறு 4
படைததாா தீஙகுநாளுககாகத துனமாா
ககனையும உணடாககினுா
மனமேடடிமையுளளவனெவனும கர் 5
ததருககு அருவருபபானவன, கையோ
டே கைகோததாலும அவன தணடனைக
குத தபபான
கிருபையினுலும சததியததினுலும பா 6
வம நிவிாததியாகும, கர்ததருககுப பயப
படுகிறதினுல மனுஷா தீமையை விடடு
விலகுவாாகள
ஒருவனுடைய வழிகள காத்தருககுப 7
பிரியமாயிருநதால, அவனுடைய சதது
ருககளும அவனேடே சமாதானமாகும
படி செயவாா
அநியாயமாய வநத அதிக வருமானத 8
திலும, நியாயமாய வநத கொஞச வருமா
னமே உததமம
மனுஷனுடைய இருதயம அவனு 9
டைய வழியை யோசிககும, அவனுடைய
நடைகளை உறுதிபபடுததுகிறவரோ காத
தா
ராஜாவின உதடுகளில திவவிய வாககு 10
பிறககும, நியாயததில அவன வாய தவ
றுது
சுமுததிரையான நிறைகோலும தரா 11
சும காததருடையது, பையிலிருககும
நிறைகலலெலலாம அவருடைய செயல
அநியாயஞசெயவது ராஜாககளுககு 12
அருவருபபு, நீதியினுல சிஙகாசனம உறு
திபபடும
நீதியுளள உதடுகள ராஜாககளுககுப 13
பிரியம, நிதானமாயப பேசுகிறவனில
ராஜாககள பிரியபபடுவாாகள
ராஜாவின கோபம மரணதூதருககுச 14
சமானம ஞானமுளளவனே அதை ஆற
றுவான
ராஜாவினமுகககளையில ஜீவன உணடு, 15
அவனுடைய தயை பினமாரி பெயயும
மேகததைபபோல இருககும
பொனனைச சமபாதிபபதிலும ஞானத 16
தைச சமபாதிபபது எவவளவு உதத
மம' வெளளியைச சமபாதிபபதிலும
புததியைச சமபாதிபபது எவவளவு
மேனமை'
தீமையை விடடு விலகுவதே செமமை 17
யானவாகளுககுச சமனன பாதை, தன
நடையைக கவனிநதிருககிறவன தன ஆத
துமாவைக காககிறுன

18 அழிவுக்கு முன்னானது அகந்தை, விழுதலுக்கு முன்னானது மனமேட்டிமை.

19 அகங்காரிகளோடே கொள்ளைப்பொருளைப் பங்கிடுவதைப்பார்க்கிலும், சிறுமையானவர்களோடே மனத்தாழ்மையாயிருப்பது நலம்.

20 விவேகத்துடன் காரியத்தை நடப்பிக்கிறவன் நன்மைபெறுவான், கர்த்தரை நம்புகிறவன் பாக்கியவான்.

21 இருதயத்தில் ஞானமுள்ளவன் விவேகியென்னப்படுவான், உதடுகளின் மதுரம் கல்வியைப் பெருகப்பண்ணும்.

22 புத்தி தன்னை உடையவர்களுக்கு ஜீவஊற்று, மதியீனரின் போதனை மதியீனமே.

23 ஞானியின் இருதயம் அவன் வாய்க்கு அறிவை யூட்டும், அவன் உதடுகளுக்கு அது மேன்மேலும் கல்வியைக் கொடுக்கும்.

24 இனியசொற்கள் தேன்கூடுபோல ஆத்துமாவுக்கு மதுரமும், எலும்புகளுக்கு ஒளஷதமுமாகும்.

25 மனுஷனுக்குச் செம்மையாய்த் தோன்றுகிற வழியுண்டு, அதின் முடிவோ மரணவழிகள்.

26 பிரயாசப்படுகிறவன் தனக்காகவே பிரயாசப்படுகிறான், அவன் வாய் அதை அவனிடத்தில் வருந்திக்கேட்கும்.

27 பேலியாளின் மகன் கிண்டிவிடுகிறான், எரிகிற அக்கினிபோன்றது அவன் உதடுகளில் இருக்கிறது.

28 மாறுபாடுள்ளவன் சண்டையைக் கிளப்பிவிடுகிறான், கோள் சொல்லுகிறவன் பிராணசிநேகிதரையும் பிரித்துவிடுகிறான்.

29 கொடுமையானவன் தன் அயலானுக்கு நயங்காட்டி, அவனை நலமல்லாத வழியிலே நடக்கப்பண்ணுகிறான்.

30 அவன் மாறுபாடானவைகளை யோசிக்கும்படி தன் கண்களை மூடி, தீமையைச் செய்யும்படி தன் உதடுகளைக் கடிக்கிறான்.

31 நீதியின் வழியில் உண்டாகும் நரைமயிரானது மகிமையான கிரீடம்.

32 பலவானைப்பார்க்கிலும் நீடிய சாந்தமுள்ளவன் உத்தமன், பட்டணத்தைப் பிடிக்கிறவனைப்பார்க்கிலும் தன் மனதை அடக்குகிறவன் உத்தமன்.

33 சீட்டு மடியிலே போடப்படும், காரியத்தீர்ப்போ கர்த்தரால் வரும்.

## 17. அதிகாரம்.

1 சண்டையோடுகூடிய வீடுநிறைந்த கொழுமையான பதார்த்தங்களைப்பார்க்கிலும், அமரிக்கையோடே சாப்பிடும் வெறும் துணிக்கையே நலம்.

2 புத்தியுள்ள வேலைக்காரன் இலச்சையுண்டாக்குகிற புத்திரனை ஆண்டு, சகோதரருக்குள்ள சுதந்தரத்தில் பங்கடைவான்.

3 வெள்ளியைக் குகையும், பொன்னைப் புடமும் சோதிக்கும், இருதயங்களைச் சோதிக்கிறவரோ கர்த்தர்.

4 துஷ்டன் அக்கிரம உதடுகள் சொல்வதை உற்றுக்கேட்கிறான், பொய்யன் கேடுள்ள நாவுக்குச் செவிகொடுக்கிறான்.

5 ஏழையைப் பரியாசம்பண்ணுகிறவன் அவனை உண்டாக்கினவரை நிந்திக்கிறான், ஆபத்தைக்குறித்துக் களிக்கிறவன் தண்டனைக்குத் தப்பான்.

6 பிள்ளைகளின் பிள்ளைகள் முதியோருக்குக் கிரீடம், பிள்ளைகளின் மேன்மை அவர்கள் பிதாக்களே.

7 மேன்மையானவைகளைப் பேசும் உதடு மூடனுக்குத் தகாது, பொய்பேசும் உதடு பிரபுவுக்கு எவ்வளவேனும் தகாது.

8 பரிதானம் வாங்குகிறவர்களின் பார்வைக்கு அது இரத்தினம்போலிருக்கும், அது நோக்கும் திசையெல்லாம் காரியம் வாய்க்கும்.

9 குற்றத்தை மூடுகிறவன் சிநேகத்தை நாடுகிறான், கேட்டதைச் சொல்லுகிறவன் பிராணசிநேகிதரையும் பிரித்துவிடுகிறான்.

10 மூடனை நூறடி அடிப்பதைப்பார்க்கிலும், புத்திமானை வாயினாலே கண்டிப்பதே அதிகமாய் உறைக்கும்.

11 துஷ்டன் கலகத்தையே தேடுகிறான், குரூரதூதன் அவனுக்கு விரோதமாக அனுப்பப்படுவான்.

12 தன் மதிகேட்டிலே திரியும் மதியீனனுக்கு எதிர்ப்படுவதைப்பார்க்கிலும், குட்டிகளைப் பறிகொடுத்த கரடிக்கு எதிர்ப்படுவது வாசி.

13 நன்மைக்குத் தீமைசெய்கிறவன் எவனோ, அவன் வீட்டைவிட்டுத் தீமை நீங்காது.

14 சண்டையின் ஆரம்பம் மதகைத் திறந்துவிடுகிறதுபோலிருக்கும், ஆதலால் விவாதம் எழும்புமுன் அதை விட்டுவிடு.

15 துன்மார்க்கனை நீதிமானாக்குகிறவனும்,
நீதிமானைக் குற்றவாளியாக்குகிறவனுமா
கிய இவ்விருவரும் கர்த்தருக்கு அருவ
ருப்பானவர்கள்
16 ஞானத்தைக் கொள்ளும்படி மூடன்
கையிலே ரொக்கம் என்னத்திற்கு? அதின்
மேல் அவனுக்கு மனமில்லையே.
17 சிநேகிதன் எல்லாக் காலத்திலும் சிநே
கிப்பான், இடுக்கணில் உதவவே சகோத
ரன் பிறந்திருக்கிறான்
18 புத்தியீனன் தன் சிநேகிதனுக்கு முன்
பாகக் கையடித்துக்கொடுத்துப் பிணைப்
படுகிறான்
19 வாதுப்பிரியன் பாதகப்பிரியன், தன்
வாசலை உயர்த்திக் கட்டுகிறவன் அழிவை
நாடுகிறான்
20 மாறுபாடான இருதயமுள்ளவன் நன்
மையைக் கண்டடைவதில்லை, புரட்டுநா
வுள்ளவன் தீமையில் விழுவான்
21 மூடபுத்திரனைப் பெறுகிறவன் தனக்
குச் சஞ்சலமுண்டாக அவனைப் பெறுகி
றான், மதியீனனுடைய தகப்பனுக்கு மகி
ழ்ச்சியில்லை
22 மனமகிழ்ச்சி நல்ல ஔஷதம், முறிந்த
ஆவியோ எலும்புகளை உலரப்பண்ணும்
23 துன்மார்க்கன், நீதியின் வழியைப் புர
ட்ட, மடியிலுள்ள பரிதானத்தை வாங்கு
கிறான்
24 ஞானம் புத்திமானுக்கு முன்பாக இரு
க்கும், மூடனுடைய கண்களோ பூமியின்
கடையாந்தரங்களில் செல்லும்
25 மூடபுத்திரன் தன் பிதாவுக்குச் சலிப்
பும், தன்னைப் பெற்றவளுக்குக் கசப்பு
மானவன்
26 நீதிமானைத் தண்டம் பிடிக்கிறதும், நியா
யஞ்செய்கிறவனைப் பிரபுக்கள் அடிக்கிற
தும் தகுதியல்ல
27 அறிவாளி தன் வார்த்தைகளை அடக்கு
கிறான், விவேகி குளிர்ந்த மனமுள்ள
வன்
28 பேசாதிருந்தால் மூடனும் ஞானவான்
என்று எண்ணப்படுவான், தன் உதடு
களை மூடுகிறவன் புத்திமான் என்று எண்
ணப்படுவான்

## 18. அதிகாரம்.

1 பிரிந்துபோகிறவன் தன் இச்சையின்
படி செய்யப்பார்க்கிறான், எல்லா ஞா
னத்திலும் தலையிட்டுக்கொள்ளுகிறான்
மூடன் ஞானத்தில் பிரியங்கொள்ளா 2
மல், தன் மனதிலுள்ளவைகளை வெளிப்
படுத்தப் பிரியப்படுகிறான்.
துன்மார்க்கன் வர அவமானம் வரும், 3
அவமானத்தோடே நிந்தையும் வரும்
மனுஷனுடைய வாய்மொழிகள் ஆழ 4
மான ஜலம்போலிருக்கும், ஞானத்தின்
ஊற்று பாய்கிற ஆற்றைப்போலிருக்கும்
வழக்கிலே நீதிமானைத் தோற்கடிக்கிற 5
தற்கு, துன்மார்க்கனுக்கு முகதாட்சிணி
யம்பண்ணுவது நல்லதல்ல
மூடனுடைய உதடுகள் விவாதத்தில் 6
நுழையும், அவன் வாய் அடிகளை வர
வழைக்கும்
மூடனுடைய வாய் அவனுக்குக் கேடு, 7
அவன் உதடுகள் அவன் ஆத்துமாவுக்குக்
கண்ணி
கோள்காரனுடைய வார்த்தைகள் விளை 8
யாட்டுப்போலிருக்கும், ஆனாலும் அவை
கள் உள்ளத்திற்குள் தைக்கும்
தன் வேலையில் அசதியாயிருப்பவன் 9
அழிம்பனுக்குச் சகோதரன்
கர்த்தரின் நாமம் பலத்த துருகம், 10
நீதிமான் அதற்குள் ஓடிச் சுகமாயிருப்
பான்
ஐசுவரியவானுடைய பொருள் அவ 11
னுக்கு அரணான பட்டணம், அது அவன்
எண்ணத்தில் உயர்ந்த மதில்போலிருக்
கும்
அழிவுவருமுன் மனுஷனுடைய இரு 12
தயம் இறுமாப்பாயிருக்கும், மேன்மை
க்கு முன்னானது தாழ்மை
காரியத்தைக் கேட்குமுன் உத்தரம் 13
சொல்லுகிறவனுக்கு, அது புத்தியீனமும்
வெட்கமுமாயிருக்கும்
மனுஷனுடைய ஆவி அவன் பலவீனத் 14
தைத் தாங்கும், முறிந்த ஆவியை யாரால்
தாங்கக்கூடும்?
புத்திமானுடைய மனம் அறிவைச் சம் 15
பாதிக்கும், ஞானியின் செவி அறிவை
நாடும்
ஒருவன் கொடுக்கும் வெகுமதி அவ 16
னுக்கு வழியுண்டாக்கி, பெரியோர்களு
க்கு முன்பாக அவனைக் கொண்டுபோய்
விடும்
தன் வழக்கிலே முதல்பேசுகிறவன் 17
நீதிமான்போலக் காணப்படுவான், அவன்
அயலானோ வந்து அவனைப் பரிசோதிக்
கிறான்

18 சீடடுபபோடுதல விரோதஙகளை ஒழி
தது, பலவானகள நடுவே சிக்கறுக
கும
19 அரணான பட்டணததை வசபபடுத
துவதைபபாாகிலும கோபஙகொண்ட
சகோதரனை வசபபடுததுவது அரிது
அவாகளுடைய விரோதஙகள கோட
டைத தாழபபாளகளபோலிருககும
20 அவனவன வாயின பலனால அவ
னவன வயிறு நிரமபும, அவனவன உதடு
களின விளைவினால அவனவன திருபதியா
வான
21 மரணமும ஜீவனும நாவின அதிகாரத
திலிருககும, அதில பிரியபபடுகிறவாகள
அதின கனியைப புசிபபாாகள
22 மனைவியைக கண்டடைகிறவன நன
மையானதைக கண்டடைகிறான காததா
ரால தயையும பெறறுககொளளுகிறான
23 தரிததிரன கெஞசிக்கேட்கிறான ஐசுவ
ரியவான கடினமாய உததரவுகொடுக
கிறான
24 சிநேகிதருளளவன சிநேசம பாராட்ட
வேணடும, சகோதரனிலும அதிக தொநத
மாயச சிநேகிபபவனுமுணடு

## 19 அதிகாரம்.

1 மாறுபாடான உதடுகளுளள மூடனைப
பாாககிலும, உததமனாய நடககிற தரித
திரனே வாசி
2 ஆததுமா அறிவிலலாமலிருபபது
நலலதலல, கால துரிதமானவன தபபி
நடககிறான
3 மனுஷனுடைய மதியீனம அவன வழி
யைத தாறுமாறாககும, எனறாலும அவன
மனம காததருககு விரோதமாயத தாஙக
லடையும
4 செலவம அநேக சிநேகிதலாச சோக
கும், தரிததிரனோ தன சிநேகிதனாலும
நெகிழபபடுவான
5 பொயச்சாட்சிககாரன ஆககினைககுத
தபபான, பொயகளைப பேசுகிறவனும
தபபுவதிலலை
6 பிரபுவின தயவை அநேகா வருந
திக கேட்பாாகள, கொடைகொடுககிறவ
னுககு எவனும சிநேகிதன
7 தரிததிரனை அவனுடைய சகோதரா
எலலாரும பகைககிறாாகளே, எததனை
அதிகமாய அவன சிநேகிதா அவனுககுத
தூரமாவாாகள, அவாகளுடைய வாாத
தைகளை அவன நாடுகிறான, அவைகளோ
வெறும வாாததைகளே
ஞானததைப பெறறுககொளளுகிறவன் 8
தன ஆததுமாவைச சிநேகிககிறான, புததி
யைக காககிறவன நனமையடைவான
பொயசசாட்சிககாரன ஆககினைககுத 9
தபபான, பொயகளைப பேசுகிறவன நாச
மடைவான
மூடனுககுச செலவம தகாது, பிரபுக 10
களை ஆணடுகொளவது அடிமைககு எவ
வளவும தகாது
மனுஷனுடைய விவேகம அவன கோ 11
பததை அடககும குறறததை மனனிப
பது அவனுககு மகிமை
ராஜாவின கோபம சிஙகததின கெர்ச 12
சிபபுககுச சமானம அவனுடைய தயை
புலலினமேல பெயயும பனிபோலிருக
கும
மூடனாகிய மகன தன தகபபனுககு 13
மிகுநத துககம, மனைவியின சணடைகள
ஓயாத ஒழுககு
வீடும ஆஸதியும பிதாககள வைககும 14
சுதநதரம புததியுளள மனைவியோ காத
தா அருளும ஈவு
சோமபல தூஙகிவிழபபணணும, அச 15
தியானவன பட்டினியாயிருபபான
கட்டளையைக காததுககொளளுகிறவன 16
தன ஆததுமாவைக காககிறான, தன வழி
களை அவமதிககிறவன சாவான
ஏழைககுஇரஙகுகிறவன காததருககுக 17
கடனகொடுககிறான, அவன கொடுதத
தை அவா திருமபக கொடுபபாா
நமபிககையிருககுமட்டும உன மக 18
னைச சிட்சைசெய, ஆனாலும அவனைக
கொலல உன ஆததுமாவை எழுமப
வொட்டாதே
கடுஙகோபி ஆககினைககுளளாவான, நீ 19
அவனைத தபபுவிததால திருமபவும தபபு
விககவேணடியதாய வரும
உன அநதியகாலததில நீ ஞானமுளள 20
வனாயிருககுமபடி ஆலோசனையைக கே
ட்டு, புததிமதியை ஏறறுககொள
மனுஷனுடைய இருதயததின எண 21
ணஙகள அநேகம, ஆனாலும காததரு
டைய யோசனையே நிலைநிறகும
நனமைசெயய மனுஷன கொணடிருக 22
கும ஆசையே தயை, பொயயனைபபாாக
கிலும தரிததிரன வாசி
காத்தருககுப பயபபடுதல ஜீவனுக 23

கேடில்லாதது, அதை அடைந்தவன் திரு
ப்தியடைந்து நிலைத்திருப்பான், தீமை
அவனை அணுகாது.
24 சோம்பேறி தன் கையைக் கலத்திலே
வைத்து, அதைத் திரும்பத் தன் வாயண்
டைக்கு எடுக்காமலிருக்கிறான்.
25 பரியாசக்காரனை அடி, அப்பொழுது
பேதை எச்சரிக்கப்படுவான்; புத்திமா
னைக் கடிந்துகொள், அவன் அறிவுள்ளவ
னாவான்.
26 தன் தகப்பனைக் கொள்ளையடித்து, தன்
தாயைத் துரத்திவிடுகிறவன், இலச்சை
யையும் அவமானத்தையும் உண்டாக்கு
கிற மகன்.
27 என் மகனே, அறிவைத் தரும் வார்த்
தைகளை விட்டு விலகச்செய்யும் போத
கங்களை நீ கேளாதே.
28 பேலியாளின் சாட்சிக்காரன் நியாயத்
தை நிந்திக்கிறான்; துன்மார்க்கருடைய
வாய் அக்கிரமத்தை விழுங்கும்.
29 பரியாசக்காரருக்குத் தண்டனைகளும்,
மூடருடைய முதுகுக்கு அடிகளும் ஆய
த்தமாயிருக்கிறது.

## 20 அதிகாரம்.

1 திராட்சரசம் பரியாசஞ்செய்யும், மது
பானம் அமளிபண்ணும்; அதினால் மயங்
குகிற ஒருவனும் ஞானவானல்ல.
2 ராஜாவின் உறுக்குதல் சிங்கத்தின் கெ
ர்ச்சிப்புக்குச் சமானம்; அவனைக் கோபப்
படுத்துகிறவன் தன் பிராணனுக்கே துரோ
கஞ்செய்கிறான்.
3 வழக்குக்கு விலகுவது மனுஷனுக்கு
மேன்மை; மூடனானவன் எவனும் அதி
லே தலையிட்டுக்கொள்வான்.
4 சோம்பேறி குளிருகிறதென்று உழமாட்
டான்; அறுப்பிலே பிச்சைகேட்டாலும்
அவனுக்கு ஒன்றுங்கிடையாது.
5 மனுஷனுடைய இருதயத்திலுள்ள யோ
சனை ஆழமான தண்ணீர்போலிருக்கிறது;
புத்திமானோ அதை மொண்டெடுப்பான்.
6 மனுஷர் பெரும்பாலும் தங்கள் தயாள
த்தைப் பிரசித்தப்படுத்துவார்கள்; உண்
மையான மனுஷனைக் கண்டுபிடிப்பவன்
யார்?
7 நீதிமான் தன் உத்தமத்திலே நடக்கி
றான்; அவனுக்குப்பிறகு அவன் பிள்ளைக
ளும் பாக்கியவான்களாயிருப்பார்கள்.
8 நியாயாசனத்தில் வீற்றிருக்கும் ராஜா
தன் கண்களினாலே சகல பொல்லாப்பை
யும் சிதறப்பண்ணுகிறான்.
என் இருதயத்தைச் சுத்தமாக்கினேன், 9
என் பாவமறத் துப்புரவானேன் என்று
சொல்லத்தக்கவன் யார்?
வெவ்வேறான நிறைகல்லும், வெவ்வே 10
றான மரக்காலும் ஆகிய இவ்விரண்டும்
கர்த்தருக்கு அருவருப்பானவைகள்.
பிள்ளையானாலும், அதின் செய்கை சுத்த 11
மோ செம்மையோ என்பது, அதின் நடக்
கையினாலே விளங்கும்.
கேட்கிற காதும், காண்கிற கண்ணும் 12
ஆகிய இவ்விரண்டையும் கர்த்தர் உண்
டாக்கினார்.
தூக்கத்தை விரும்பாதே, விரும்பினால் 13
தரித்திரனாவாய்; கண்விழித்திரு, அப்பொ
ழுது ஆகாரத்தினால் திருப்தியாவாய்.
கொள்ளுகிறவன் நல்லதல்ல, நல்ல 14
தல்ல என்பான்; போய்விட்டபின்போ
மெச்சிக்கொள்வான்.
பொன்னும் மிகுதியான முத்துக்களும் 15
உண்டு; அறிவுள்ள உதடுகளோ விலையுயா
ந்த இரத்தினம்.
அந்நியனுக்காகப் பிணைப்பட்டவனு 16
டைய வஸ்திரத்தை எடுத்துக்கொள்; அந்
நிய ஸ்திரீயினிமித்தம் அவன் கையில் ஈடு
வாங்கிக்கொள்.
வஞ்சனையினால் வந்த போஜனம் மனு 17
ஷனுக்கு இன்பமாயிருக்கும்; பின்போ
அவனுடைய வாய் பருக்கைக் கற்களால்
நிரப்பப்படும்.
ஆலோசனையினால் எண்ணங்கள் ஸ்தி 18
ரப்படும்; நல்யோசனை செய்து யுத்தம்
பண்ணு.
தூற்றிக்கொண்டு திரிகிறவன் இரகசி 19
யங்களை வெளிப்படுத்துவான்; ஆதலால்
தன் உதடுகளினாலே அலப்புகிறவனோடே
கலவாதே.
தன் தகப்பனையும் தன் தாயையும் தூ 20
ஷிக்கிறவனுடைய தீபம் காரிருளில்
அணைந்துபோம்.
ஆரம்பத்திலே துரிதமாகக் கிடைத்த 21
சுதந்தரம் முடிவிலே ஆசீர்வாதம்பெறாது.
தீமைக்குச் சரிக்கட்டுவேன் என்று 22
சொல்லாதே; கர்த்தருக்குக் காத்திரு,
அவர் உன்னை இரட்சிப்பார்.
வெவ்வேறான நிறைகற்கள் கர்த்தருக்கு 23
அருவருப்பானவைகள்; கள்ளத்தராசு
நல்லதல்ல.

24 கர்த்தராலே மனுஷருடைய நடைகள்
வாய்க்கும், ஆகையால் மனுஷன் தன்
வழியை அறிந்துகொள்வதெப்படி?
25 பரிசுத்தமானதை விழுங்குகிறதும,
பொருத்தனை செய்தபின்பு யோசிக்கிற
தும், மனுஷனுக்குக் கண்ணியாயிருக்
கும்.
26 ஞானமுள்ள ராஜா துன்மார்க்கரைச்
சிதறடித்து, அவர்கள்மேல் உருளையை
உருட்டுவான்.
27 மனுஷனுடைய ஆவி கர்த்தர் தந்த தீப
மாயிருக்கிறது, அது உள்ளத்தில் உள்ள
வைகளையெல்லாம் ஆராய்ந்துபார்க்கும்
28 தயையும் சத்தியமும் ராஜாவைக் காக்
கும், தயையினாலே தன் சிங்காசனத்தை
திறப்படுத்துவான்
29 வாலிபரின் அலங்காரம் அவர்கள் பராக்
கிரமம், முதிர்வயதானவர்களின் மகிமை
அவர்கள் நரை
30 காயத்தின் தழும்புகளும், உள்ளத்தில்
உறைக்கும் அடிகளும், பொல்லாதவனை
அழுக்கறத் துடைக்கும்

## 21 அதிகாரம்

1 ராஜாவின் இருதயம் கர்த்தரின் கை
யில் நீர்க்கால்களைப்போலிருக்கிறது அ
தைத் தமது சித்தத்தின்படி அவர் திருப்பு
கிறார்
2 மனுஷனுடைய வழியெல்லாம் அவன்
பார்வைக்குச் செம்மையாகத் தோன்றும்,
கர்த்தரோ இருதயங்களை நிறுத்துப்பார்க
கிறார்
3 பலியிடுவதைப்பார்க்கிலும், நீதியும் நியா
யமும் செய்வதே கர்த்தருக்குப் பிரியம்
4 மேட்டிமையான பார்வையும், அகந்தை
யான மனமுமுள்ள துன்மார்க்கர் போடும்
வெளிச்சம் பாவமே
5 ஜாக்கிரதையுள்ளவனுடைய நினைவுகள்
செல்வத்துக்கும், பதறுகிறவனுடைய
நினைவுகள் தரித்திரத்துக்கும் ஏதுவாகும்
6 பொய்நாவினால் பொருளைச் சம்பாதிப்
பது சாவைத் தேடுகிறவர்கள் விடுகிற
சுவாசம்போலிருக்கும்
7 துன்மார்க்கர் நியாயஞ்செய்ய மனதில்
லாதிருக்கிறபடியால், அவர்கள் பாழக்
கடிக்கப்பட்டுப்போவார்கள்
8 குற்றமுள்ளவன் தன் வழிகளில் மாறு
பாடுள்ளவன், சுத்தமுள்ளவனோ தன் கிரி
யையில் செம்மையானவன்

சண்டைக்காரியோடே ஒரு பெரிய 9
வீட்டில் குடியிருப்பதைப் பார்க்கிலும்,
வீட்டின்மேல் ஒரு மூலையில் தங்கியிருப்
பதே நலம்
துன்மார்க்கனுடைய மனம் பொல்லாப் 10
பைச் செய்ய விரும்பும், அவன் கண்க
ளில் அவன் அயலானுக்கு இரக்கங்கிடை
யாது
பரியாசக்காரனை தண்டிக்கும்போது 11
பேதை ஞானமடைவான், ஞானவான்
போதிக்கப்படும்போது அறிவடைவான்
நீதிபரர் துன்மார்க்கருடைய வீட்டைக் 12
கவனித்துப்பார்க்கிறார், துன்மார்க்கரைத்
தீங்கில் கவிழ்த்துப்போடுவார்
ஏழையின் கூக்குரலுக்குத் தன் செவி 13
யை அடைத்துக்கொள்ளுகிறவன், தானும்
சத்தமிட்டுக் கூப்பிடும்போது கேட்கப்
படமாட்டான்
அந்தரங்கமாய்க் கொடுக்கப்பட்ட வெ 14
குமதி கோபத்தைத் தணிக்கும், மடியிலு
ள்ள பரிதானம் குரோதத்தை ஆற்றும்
நியாயந்தீர்ப்பது நீதிமானுக்குச் சந்தோ 15
ஷமும், அக்கிரமக்காரருக்கோ அழிவுமாம்
விவேகத்தின் வழியை விட்டுத் தப்பி 16
நடக்கிற மனுஷன் செத்தவர்களின் கூட்
டத்தில் தாபரிப்பான்
சிற்றின்பப்பிரியன் தரித்திரனாவான், 17
மதுபானத்தையும் எண்ணெயையும் விரு
ம்புகிறவன் ஐசுவரியவானாவதில்லை
நீதிமானுக்குப் பதிலாகத் துன்மார்க்க 18
னும், செம்மையானவனுக்குப் பதிலாகத்
துரோகியும் மீட்கும்பொருளாவார்கள்
சண்டைக்காரியும் கோபக்காரியுமான 19
ஸ்திரீயுடன் குடியிருப்பதைப்பார்க்கிலும்
வனாந்தரத்தில் குடியிருப்பது நலம்
வேண்டிய திரவியமும் எண்ணெயும் 20
ஞானவானுடைய வாசஸ்தலத்தில் உண்
டு, மூடனோ அதைச் செலவழித்துப்போ
டுகிறான்
நீதியையும் தயையையும் பின்பற்றுகிற 21
வன் ஜீவனையும் நீதியையும் மகிமையை
யும் கண்டடைவான்
பலவான்களுடைய பட்டணத்தின் மதி 22
லை ஞானமுள்ளவன் ஏறிப்பிடித்து, அவர்
கள் நம்பின அரணை இடித்துப்போடு
வான்
தன் வாயையும் தன் நாவையும் காக்கிற 23
வன் தன் ஆத்துமாவை இடுக்கண்களுக்கு
விலக்கிக் காக்கிறான்

24 அகங்காரமும இடும்பமுள்ளவனுக
குப பரியாசககாரனெனறு பெயா, அவன
அகஙகதையான சினததோடே நடககிறுன
25 சோமபேறியின கைகள வேலைசெயயச
சமமதியாததினுல அவன ஆசை அவனைக
கொலலும
26 அவன நாளதோறும ஆவலுடன இச
சிககிறுன, நீதிமானோ பிசினிததனமிலலா
மல கொடுபபான
27 துனமாாகசருடைய பலி அருவருபபா
னது, அதைத துாசசிநதையோடே செலு
ததினுலோ எததனை அதிகமாய அருவருக
கபபடும
28 பொயசசாடசிககாரன கெடடுபபோ
வான, செவிகொடுககிறவனோ எபபொ
ழுதும பேசததககவனுவான
29 துனமாாககன தன முகததைச சகடினப
படுததுகிறுன, செமமையானவனோ தன
வழியை நோபபடுததுகிறுன
30 காததருககுவிரோதமான ஞானமுமில
லை, புததியுமிலலை, ஆலோசனையுமிலலை
31 குதிரை யுததநாளுககு ஆயததமாககப
படும, ஜெயமோ காததரால வரும

## 22. அதிகாரம

1 திரளான ஐசுவரியததைபபாாககிலும
நறகீாததியே தெரிநதுகொளளபபடததக
கது, பொன வெளளியைபபாாககிலும
தயையே நலம
2 ஐசுவரியவானும தரிததிரனும ஒருவ
ரையொருவா சநதிககிறுாகள அவாகள
அனைவரையும உணடாககினவா காததர்
3 விவேகி ஆபததைக கணடு மறைநது
கொளளுகிறுன, பேதைகள நெடுகப
போய தணடிககபபடுகிறுாகள
4 தாழமைககும காததருககுப பயபபடு
தலுககும வரும பலன ஐசுவரியமும மகி
மையும ஜீவனுமாம
5 மாறுபாடுளளவனுடைய வழியிலே
முளளுகளும கணணிகளுமுணடு தன
ஆததுமாவைக காககிறவன அவைகளுக
குத துாரமாய விலகிபபோவான
6 பிளளையானவன நடககவேணடிய வழி
யிலே அவனை நடதது, அவன முதிாவய
திலும அதை விடாதிருபபான
7 ஐசுவரியவான தரிததிரனை ஆளுகிறுன,
கடனவாஙகினவன கடனகொடுததவனு
ககு அடிமை
8 அநியாயததை விதைககிறவன வருத
தததை அறுபபான, அவன உக்கிரத்தின்
மிலாறு ஒழியும
கருணைககணணன ஆசீாவதிககபபடு 9
வான, அவன தன ஆகாரததில தரித்திர
னுககுக கொடுககிறுன
பரியாசககாரனைத துரததிவிடு, அப 10
பொழுது வாது நீஙகும, விரோதமும அவ
மானமும ஒழியும
சுதத இருதயததை விருமபுகிறவனு 11
டைய உதடுகள இனிமையானவைகள,
ராஜா அவனுககுச சிநேகிதனுவான
காத்தருடைய கணகள ஞானததைக் 12
காககும, துரோகிகளின வாாததைகளை
யோ அவா தாறுமாறுககுகிறுா
வெளியிலே சிஙகம, வீதியிலே கொலை 13
யுணபேன எனறு சோமபேறி சொலலு
வான
பரஸதிரீகளின வாய ஆழமான படுகுழி, 14
காததருடைய கோபததிறகு ஏதுவான
வன அதிலே விழுவான
பிளளையின நெஞசில மதியீனம ஒடடி 15
யிருககும, அதைத தணடனையின பிரமபு
அவனைவிடடு அகறறும
தனககு அதிகம உணடாகத தரிததி 16
ரனை ஒடுககுகிறவன தனககுக குறைசச
லுணடாகவே ஐசுவரியவானுககுக கொ
டுபபான
உன செவியைச சாயதது, ஞானிகளு 17
டைய வாாததைகளைக கேடடு, என போ
தகததை உன இருதயததில வை —அவை 18
களை உன உளளததில காதது, அவைகளை
உன உதடுகளில நிலைததிருககபபணணும
போது, அது இனபமாயிருககும —உன 19
நமபிககை காத்தாமேல இருககுமபடி,
இனறையதினம அவைகளை உனக்குத
தெரியபபடுததுகிறேன
சததியவாாததைகளின யதாாததததை 20
நான உனககுத் தெரிவிககுமபடிககும, நீ
உனனை அனுபபினவாகளுககுச சததிய
வாாததைகளை மறுமொழியாகச சொல
லுமபடிககும, — ஆலோசனையையும ஞா 21
னததையுமபறறி நான உனககு முககிய
மானவைகளை எழுதவிலலையா?
ஏழையாயிருககிறுன எனறு ஏழை 22
யைக கொளளையிடாதே, சிறுமையான
வனை நியாயஸ்தலததில ஒடுககிரவபபடுத
தாதே —காத்தா அவாகளுககாக வழக 23
காடி, அவாகளைக கொளளையிடுகிறவாகளு
டைய பிராணனைக கொளளையிடுவாா

24 கோபக்காரனுக்குத் தோழனாகாதே,
உக்கிரமுள்ள மனுஷனோடே நடவாதே —
25 அப்படிச் செய்தால், நீ அவனுடைய
வழிகளைக் கற்றுக்கொண்டு, உன் ஆத்து
மாவுக்குக் கண்ணியை வருவிப்பாய்
26 கையடித்து உடன்பட்டு, கடனுக்கா
கப் பிணைப்படுகிறவர்களில் ஒருவனாகா
27 தே — செலுத்த உனக்கு ஒன்றுமில்லா
திருந்தால், நீ படுத்திருக்கும் படுக்கையை
யும் அவன் எடுத்துக்கொள்ளவேண்டிய
தாகுமே
28 உன் பிதாக்கள் நாட்டின பூர்வ எல்
லைக்குறியை மாற்றாதே
29 தன் வேலையில் ஜாக்கிரதையாயிருக்
கிறவனை நீ கண்டால், அவன் நீசருக்கு
முன்பாக நில்லாமல், ராஜாக்களுக்கு
முன்பாக நிற்பான்

## 23 அதிகாரம்

1 நீ ஒரு அதிபதியோடே போஜனம்ப
ண்ண உட்கார்ந்தால், உனக்கு முன்பாக
இருக்கிறதை நன்றாய்க் கவனித்துப்பார் —
2 நீ போஜனப்பிரியனாயிருந்தால், உன்
3 தொண்டையிலே கத்தியை வை — அவனு
டைய ருசியுள்ள பதார்த்தங்களை இச்சி
யாதே, அவைகள் கள்ளப்போஜனமாமே
4 ஐசுவரியவானாகவேண்டுமென்று பிர
யாசப்படாதே, சுயபுத்தியைச் சாராதே —
5 இல்லாமற்போகும் பொருள்மேல் உன்
கண்களைப் பறக்கவிடுவானேன்? அது கழு
கைப்போல் சிறகுகளைத் தனக்கு உண்டு
பண்ணிக்கொண்டு, ஆகாயமார்க்கமாய்ப்
பறந்துபோம்
6 வன்கண்ணனுடைய ஆகாரத்தைப் புசி
யாதே, அவனுடைய ருசியுள்ள பதார்த்
7 தங்களை இச்சியாதே — அவன் இருதயத்
தின் நினைவு எப்படியோ, அப்படியே
அவன் இருக்கிறான், புசியும், பானம்பண்
ணும் என்று அவன் உன்னோடே சொன்
னாலும், அவன் இருதயம் உன்னோடே
8 இராது — நீ புசித்த துணிக்கையை வாந்தி
பண்ணி, உன் இனியசொற்களை இழந்து
போவாய்
9 மூடனுடைய செவிகள் கேட்கப் பே
சாதே, அவன் உன் வார்த்தைகளின் ஞா
னத்தை அசட்டைபண்ணுவான்
10 பூர்வ எல்லைக்குறியை மாற்றாதே, திக்
கற்ற பிள்ளைகளுடைய நிலங்களை அபக
11 ரித்துக்கொள்ளாதே — அவர்களுடைய
மீட்பர் வல்லவர், அவர் உன்னுடனே
அவர்களுக்காக வழக்காடுவார்
உன் இருதயத்தைப் புத்திமதிக்கும், 12
உன் செவிகளை அறிவின் வார்த்தைகளுக்
கும் சாய்ப்பாயாக
பிள்ளையைத் தண்டியாமல் விடாதே 13
அவனைப் பிரம்பினால் அடித்தால் அவன்
சாகான் — நீ பிரம்பினால் அவனை அடிக் 14
கிறதினால் பாதாளத்துக்கு அவன் ஆத்து
மாவைத் தப்புவிப்பாயே
என் மகனே, உன் இருதயம் ஞான 15
முள்ளதாயிருந்தால், என்னிலே என்
இருதயம் மகிழும் — உன் உதடுகள் செம் 16
மையானவைகளைப் பேசினால், என் உள்
ளிந்திரியங்கள் மகிழும்
உன் மனதைப் பாவிகள்மேல் பொ 17
றாமைகொள்ள விடாதே நீ நாடோறும்
கர்த்தரைப் பற்றும் பயத்தோடிரு —
நிச்சயமாகவே முடிவு உண்டு, உன் நம் 18
பிக்கை வீண்போகாது
என் மகனே, நீ செவிகொடுத்து ஞான 19
மடைந்து, உன் இருதயத்தை நல்வழியி
லே நடத்து — மதுபானப்பிரியரையும் 20
மாம்சப் பெருந்தீனிக்காரரையும் சேரா
தே — குடியனும் போஜனப்பிரியனும் 21
தரித்திரராவார்கள், தூக்கம் கந்தைகளை
உடுத்துவிக்கும்
உன்னைப் பெற்ற தகப்பனுக்குச் செவி 22
கொடு, உன் தாய் வயதுசென்றவளாகும்
போது அவளை அசட்டைபண்ணாதே
சத்தியத்தை வாங்கு, அதை விற்காதே 23
அப்படியே ஞானத்தையும் உபதேசத்தை
யும் புத்தியையும் வாங்கு
நீதிமானுடைய தகப்பன் மிகவும் களி 24
கூருவான், ஞானமுள்ள பிள்ளையைப்
பெற்றவன் அவனால் மகிழுவான் — உன் 25
தகப்பனும் உன் தாயும் சந்தோஷப்படு
வார்கள், உன்னைப் பெற்றவள் மகிழு
வாள்
என் மகனே, உன் இருதயத்தை எனக் 26
குத் தா, உன் கண்கள் என் வழிகளை
நோக்குவதாக — வேசி ஆழமான படுகுழி, 27
பரஸ்திரீ இடுக்கமான கிணறு — அவள் 28
கொள்ளைக்காரனைப்போல் பதிவிருந்து,
மனுஷருக்குள்ளே பாதகரைப் பெருகப்
பண்ணுகிறாள்
ஐயோ! யாருக்கு வேதனை? யாருக்குத் 29
துக்கம்? யாருக்குச் சண்டைகள்? யாருக்
குப் புலம்பல்? யாருக்குக் காரணமில்ல

லாத காயங்கள்? யாருக்கு இரத்தங்கல
30 ங்கின கண்கள்?—மதுபானம் இருக்கும்
இடத்திலே தங்கித்தரிப்பவர்களுக்கும்,
கலப்புள்ள சாராயத்தை நாடுகிறவர்க
31 ளுக்குந்தானே —மதுபானம் இரத்தவரு
ணமாயிருந்து, பாத்திரத்தில் பளபள
ப்பாய்த் தோன்றும்போது, நீ அதைப் பா
ராதே, அது மெதுவாய் இறங்கும் —
32 முடிவிலே அது பாம்பைப்போல் கடிக்
33 கும், விரியனைப்போல் தீண்டும் — உன்
கண்கள் பரஸ்திரீகளை நோக்கும் உன்
உள்ளம் தாறுமாறானவைகளைப் பேசும் —
34 நீ நடுக்கடலிலே சயனித்திருக்கிறவனைப்
போலும், பாய்மரத்தட்டிலே படுத்திருக்
35 கிறவனைப்போலும் இருப்பாய் —என்னை
அடித்தார்கள், எனக்கு நோகவில்லை
என்னை அறைந்தார்கள், எனக்குச் சுரணை
யில்லை, நான் அதைப் பின்னும் தொடர்ந்
து தேட எப்பொழுது விழிப்பேன் என்
பாய்

## 24 அதிகாரம்

1 பொல்லாத மனுஷர்மேல் பொறாமை
கொள்ளாதே அவர்களோடே இருக்க
2 வும் விரும்பாதே —அவர்கள் இருதயம்
கொடுமையை யோசிக்கும், அவர்கள் உத
டுகள் தீவினையைப் பேசும்
3 வீடு ஞானத்தினாலே கட்டப்பட்டு,
விவேகத்தினாலே நிலைநிறுத்தப்படும் —
4 அறிவினாலே அறைகளில் அருமையும்
இனிமையுமான சகலவிதப் பொருள்க
ளும் நிறைந்திருக்கும்
5 ஞானமுள்ளவன் பெலமுள்ளவன்,
அறிவுள்ளவன் தன் வல்லமையை அதிக
6 ரிக்கப்பண்ணுகிறான் — நல்யோசனைசெ
ய்து யுத்தம்பண்ணு, ஆலோசனைக்காரர்
அநேகரால் ஜெயங்கிடைக்கும்
7 மூடனுக்கு ஞானம் எட்டாத உயரமா
யிருக்கும், அவன் நியாயஸ்தலத்தில் தன்
வாயைத் திறவான்
8 தீவினைசெய்ய உபாயஞ்செய்கிறவன்
துஷ்டன் எனப்படுவான்
9 தீயநோக்கம் பாவமாம், பரியாசக்கா
ரன் மனுஷருக்கு அருவருப்பானவன்
10 ஆபத்துக்காலத்தில் நீ சோர்ந்துபோ
வாயானால், உன் பெலம் குறுகினது
11 மரணத்துக்கு ஒப்பிக்கப்பட்டவர்க
ளையும், கொலையுண்ணப்போகிறவர்களை
யும் விடுவிக்கக்கூடுமானால் விடுவி —
அதை அறியோம் என்பாயாகில், இருத 12
யங்களைச் சோதிக்கிறவர் அறியாரோ? உன்
ஆத்துமாவைக் காக்கிறவர் கவனியாரோ?
அவர் மனுஷருக்கு அவனவன் கிரியைக
குத் தக்கதாகப் பலனளியாரோ?
என் மகனே, தேனைச் சாப்பிடு, அது 13
நல்லது கூட்டிலிருந்து ஒழுகும் தேன்
உன் வாய்க்கு இன்பமாயிருக்கும் —அப 14
படியே ஞானத்தை அறிந்துகொள்வது
உன் ஆத்துமாவுக்கு இன்பமாயிருக்கும்,
அதைப் பெற்றுக்கொண்டால், அது முடி
வில் உதவும், உன் நம்பிக்கை வீண்போ
காது
துஷ்டனே, நீ நீதிமானுடைய வாசஸ 15
தலத்துக்கு விரோதமாய்ப் பதிவிராதே
அவன் தங்கும் இடத்தைப் பாழாக்கிப்
போடாதே —நீதிமான் ஏழுதரம் விழுந்தா 16
லும் திரும்பவும் எழுந்திருப்பான் துன்
மார்க்கரோ தீங்கிலே இடறுண்டு கிடப்
பார்கள் —உன் சத்துரு விழும்போது சந் 17
தோஷப்படாதே அவன் இடறும்போது
உன் இருதயம் களிகூராதிருப்பதாக —
கர்த்தர் அதைக் கண்பார், அது அவர் 18
பார்வைக்குப் பொல்லாப்பாயிருக்கும்,
அப்பொழுது அவனிடத்தினின்று அவர்
தமது கோபத்தை நீக்கிவிடுவார்
பொல்லாதவர்களைக்குறித்து எரிச்சலா 19
காதே, துன்மார்க்கர்மேல் பொறாமை
கொள்ளாதே —துன்மார்க்கனுக்கு நல் 20
முடிவு இல்லை துன்மார்க்கனுடைய விள
க்கு அணைந்துபோம்
என் மகனே, நீ கர்த்தருக்கும் ராஜாவுக் 21
கும் பயந்து நட கலகக்காரரோடு கல
வாதே —சடிதியில் அவர்களுடைய ஆப 22
த்து எழும்பும், அவர்கள் இருவரின் சங்
காரத்தையும் அறிந்தவன் யார்?
பின்னும் ஞானமுள்ளவர்களின் புத்திம 23
திகள் என்னவென்றால் நியாயத்திலே முக
தாட்சிணியம் நல்லதல்ல —துன்மார்க்க 24
னைப் பார்த்து நீதிமானாயிருக்கிறாய் என்று
சொல்லுகிறவனை ஜனங்கள் சபிப்பார்கள்,
பிரஜைகள் அவனை வெறுப்பார்கள் —
அவனைக் கடிந்துகொள்ளுகிறவர்கள்மேல் 25
பிரியமுண்டாகும், அவர்களுக்கு உத்தம
ஆசீர்வாதம் கிடைக்கும்
செம்மையான மறுமொழி சொல்லுகிற 26
வன் உதடுகளை முத்தமிடுகிறவனுக்குச்
சமானம்
வெளியிலே உன் வேலையை எத்தனப்ப 27

டுதது, வயலில அதை ஒழுஙகாககி,
28 பினபு உன வீடடைக கடடு —நியாயமின
றிப பிறனுககு விரோதமாயச சாடசியாக
ஏறபடாதே, உன உதடுகளினால வஞச
கம பேசாதே
29 அவன எனககுச செயதபிரகாரம நா
னும அவனுககுச செயவேன, அவன
செயத செயலைககுததககதாக நானும
அவனுககுச சரிககடடுவேன என்று நீ
சொலலாதே
30 சோமபேறியின வயலையும, மதியீனனு
டைய திராடசததோடடததையும கடநது
31 போனேன இதோ, அதெலலாம முளளு
ககாடாயிருநதது, நிலததின முகததைக
காஞசொறி மூடினது, அதின கறசுவா
32 இடிநதுகிடநதது —அதைக கணடு சிநத
னைபணணினேன அதை நோககிப புததி
33 யடைநதேன —இனனுஙகொஞசம உறங
கடடும, இனனுஙகொஞசம கைமுடககி
ககொணடு நிததிரைசெயயடடும எனபா
34 யோ?—உன தரிததிரம வழிபபோககனைப
போலும, உன வறுமை ஆயுதமணிநத
வனைபபோலும வரும

## 25 அதிகாரம

1 யூதாவின ராஜாவாகிய எசேககியாவின
மனுஷா பெயர்ததெழுதின சாலொமோனு
டைய நீதிமொழிகள
2 காரியததை மறைபபது தேவனுககு
மேனமை, காரியததை ஆராயவதோ
3 ராஜாககளுககு மேனமை —வானததின
உயரமும, பூமியின ஆழமும, ராஜாகக
ளின இருதயஙகளும ஆராயநதுமுடி
யாது
4 வெளளியினினறு களிமபை நீககிவிடு,
அபபொழுது தடடானால நலல உடை
5 மை பிறககும —ராஜாவின முனனினறு
துஷடரை நீககிவிடு, அபபொழுது அவனு
டைய சிஙகாசனம நீதியினால நிலைநிறகும
6 ராஜாவின சமுகததில மேனமைபாரா
டடாதே, பெரியோாகளுடைய ஸதானத
தில நிலலாதே.
7 உன கணகள கணட பிரபுவின சமுக
ததில நீ தாழததபபடுவது நலலதலல,
அவன உனனைப பாாதது மேலே வா
என்று சொலவதே உனககு மேனமை
8 வழககாடப பதறறமாயப போகாதே,
முடிவிலே உன அயலான உனனை வெட
கபபடுததுமபோது, நீ எனனசெயயலாம
என்று நினைபபாயே —நீ உன அயலா 9
னுடனேமாததிரம உன வியாஜயததைசகு
றிதது வழககாடு, மறறவனிடததில இரக
சியததை வெளிபபடுததாதே —மறறப 10
படி அதைக கேடகிறவன உனனை நிநதிப
பான உன அவமானம உனனைவிடடு நீங
காது
ஏறறசமயததில சொனன வாாததை 11
வெளளித்தடடில வைககபபடட பொற
பழஙகளுககுச சமானம
கேடகிறசெவிககு, ஞானமாயக கடிநது 12
கொணடு புததிசொலலுகிறவன, பொறக
டுககனுககும ஆபரணததுககும ஆபரணததிற
கும சரி
கோடைகாலததில உறைநதமழையின 13
குளிாசசி எபபடியிருககிறதோ, அபபடி
யே உணமையான ஸதானாபதியும தனனை
அனுபபினவனுககு இருபபான, அவன
தன எஜமானகளுடைய ஆததுமாவைக
குளிரபபணணுவான
கொடுபபேன என்று சொலலியும கொ 14
டாமலிருககிற வஞசகன மழையிலலாத
மேகஙகளுககும காறறுககும சரி
நீணட பொறுமையினால பிரபுவையும 15
சமமதிககபபணணலாம, இனிய நாவு
எலுமபையும நொறுககும
தேனைக கணடுபிடிததாயானால மடடா 16
யச சாபபிடு மிதமிஞசிச சாபபிடடால
வாநதிபணணுவாய —உன அயலான சலி 17
தது உனனை வெறுககாதபடிககு, அடிக
கடி அவன வீடடில காலவைககாதே
பிறனுககு விரோதமாயப பொயச 18
சாடசி சொலலுகிற மனுஷன தணடாயுத
ததுககும கடகததுககும கூாமையான
அமபுககும ஒபபானவன
ஆபததுககாலததில துரோகியை நமபு 19
வது உடைநத பலலுககும மொழிபுரணட
காலுககும சமானம
மனததுககமுளளவனுககுப பாடடுக 20
ளைப பாடுகிறவன, குளிாகாலததில வஸதி
ரததைக களைகிறவனைபபோலவும, வெடி
யுபபினமேல வாாதத காடியைபபோல
வும இருபபான
உன சததுரு பசியாயிருநதால, அவனுக 21
குப புசிகக ஆகாரஙகொடு, அவன தாக
மாயிருநதால, குடிககத தணணீாகொடு. -
அதினால நீ அவன தலையினமேல எரிகிற 22
தழலகளைக குவிபபாய, காத்தர் உனக
குப பலனளிபபா

23 வடகாற்று மழையையும்; புறங்கூறுகிற
நாவு கோபமுகத்தையும் பிறப்பிக்கும்.
24 சண்டைக்காரியோடே ஒரு பெரிய வீட்
டில் குடியிருப்பதைப் பார்க்கிலும், வீட்
டின்மேல் ஒரு மூலையில் தங்குவதே நலம்.
25 தூரதேசத்திலிருந்து வரும் நற்செய்தி
விடாய்த்த ஆத்துமாவுக்குக் கிடைக்கும்
குளிர்ந்த தண்ணீருக்குச் சமானம்.
26 துன்மார்க்கருக்கு முன்பாக நீதிமான்
தள்ளாடுவது கலங்கின கிணற்றுக்கும்
கெட்டுப்போன சுனைக்கும் ஒப்பாகும்.
27 தேனை மிகுதியாய் உண்பது நல்லதல்ல,
தற்புகழ்ச்சியை நாடுவதும் புகழல்ல.
28 தன் ஆவியை அடக்காத மனுஷன் மதி
லிடிந்த பாழான பட்டணம்போலிருக்கி
றான்.

## 26 அதிகாரம்.

1 உஷ்ணகாலத்திலே உறைந்த பனியும்,
அறுப்புக்காலத்திலே மழையும் தகாதது
போல, மூடனுக்கு மகிமை தகாது.
2 அடைக்கலான் குருவி அலைந்து போவ
துபோலும், தகைவிலான் குருவி பறந்து
போவதுபோலும், காரணமில்லாமலிட்ட
சாபம் தங்காது.
3 குதிரைக்குச் சவுக்கும், கழுதைக்குக்
கடிவாளமும், மூடனுடைய முதுகுக்குப்
பிரம்பும் ஏற்றது.
4 மூடனுக்கு அவன் மதியீனத்தின்படி
மறுஉத்தரவு கொடாதே, கொடுத்தால்
5 நீயும் அவனைப்போலாவாய். — மூடனுக்கு
அவன் மதியீனத்தின்படி மறுஉத்தரவு கொ
டு, கொடாவிட்டால் அவன் தன் பார்
வைக்கு ஞானியாயிருப்பான்.
6 மூடன் கையிலே செய்தி அனுப்புகிற
வன் தன் கால்களையே தறித்துக்கொண்டு
நஷ்டத்தை அடைகிறான்.
7 நொண்டியின் கால்கள் குந்திக்குந்தி
நடக்கும், அப்படியே மூடரின் வாயிலு
ள்ள உவமைச்சொல்லும் குந்தும்.
8 மூடனுக்குக் கனத்தைக் கொடுக்கிற
வன் கவணிலே கல்லைக் கட்டுகிறவன்போ
லிருப்பான்.
9 மூடன் வாயில் அகப்பட்ட பழமொழி
வெறியன் கையில் அகப்பட்ட முள்ளு.
10 பலத்தவன் அனைவரையும் நோகப்
பண்ணி, மூடனையும் வேலைகொள்ளுகி
றான், மீறிநடக்கிறவர்களையும் வேலைகொ
ள்ளுகிறான்.

நாயானது தான் கக்கினதைத் தின்னும் 11
படி திரும்புவதுபோல, மூடனும் தன்
மூடத்தனத்துக்குத் திரும்புகிறான்.
தன் பார்வைக்கு ஞானியாயிருப்பவ 12
னைக் கண்டாயானால், அவனைப் பார்க்கி
லும் மூடனைக்குறித்து அதிக நம்பிக்கை
யாயிருக்கலாம்.
வழியிலே சிங்கம் இருக்கும், நடுவீதி 13
யிலே சிங்கம் இருக்கும் என்று சோம்
பேறி சொல்லுவான்.
கதவு கீல்முனையில் ஆடுகிறதுபோல, 14
சோம்பேறியும் படுக்கையில் ஆடிக்கொ
ண்டிருக்கிறான். — சோம்பேறி தன் கை 15
யைக் கலத்திலே வைத்து அதைத் தன்
வாய்க்குத் திருப்ப எய்க்க வருத்தப்படு
கிறான். — புத்தியுள்ள மறுஉத்தரவு சொல் 16
லத்தக்க ஏழுபேரைப்பார்க்கிலும் சோம்
பேறி தன் பார்வைக்கு அதிக ஞானமுள்
ளவன்.
வழியே போகையில் தனக்கடுத்த வழக் 17
கில் தலையிடுகிறவன் நாயைக் காதைப்
பிடித்திழுக்கிறவனைப்போலிருக்கிறான்.
கொள்ளிகளையும் அம்புகளையும் சாவுக் 18
கேதுவானவைகளையும் எறிகிற பைத்தியக்
காரன் எப்படியிருக்கிறானோ, — அப்படி 19
யே, தனக்கடுத்தவனை வஞ்சித்து: நான்
விளையாட்டுக்கல்லவோ செய்தேன் என்று
சொல்லுகிற மனுஷனும் இருக்கிறான்.
விறகில்லாமல் நெருப்பு அவியும், 20
கோள்சொல்லுகிறவனில்லாமல் சண்டை
அடங்கும்.
கரிகள் தழலுக்கும், விறகு நெருப்புக் 21
கும் ஏதுவானதுபோல, வாதப்பிரியன்
சண்டைகளை மூட்டுகிறதற்கு ஏதுவான
வன்.
கோள்காரனுடைய வார்த்தைகள் விளை 22
யாட்டுப்போலிருக்கும், ஆனாலும் அவை
கள் உள்ளத்திற்குள் தைக்கும்.
நேச அனலைக் காண்பிக்கிற உதடுக 23
ளோடு கூடிய தீயநெஞ்சம் வெள்ளிப்
பூச்சுப் பூசிய ஓட்டைப்போலிருக்கும்.
பகைஞன் தன் உள்ளத்தில் கபடத்தை 24
மறைத்து, தன் உதடுகளினால் சூதுபேசு
கிறான். — அவன் இதம்பேசினாலும் அவனை 25
நம்பாதே, அவன் இருதயத்திலே ஏழு அரு
வருப்புகள் உண்டு. — பகையை வஞ்சக 26
மாய் மறைத்துவைக்கிறவனெவனோ, அவ
னுடைய பொல்லாங்கு மகா சபையிலே
வெளிப்படுத்தப்படும்.

27 படுகுழியை வெட்டுகிறவன் தானே
அதில் விழுவான், கல்லைப் புரட்டுகிறவன்
28 மேல் அந்தக் கல் திரும்ப விழும் — கள்ள
நாவு தன்னால் கிலேசப்பட்டவர்களைப்
பகைக்கும், இச்சகம்பேசும் வாய் அழி
வை உண்டுபண்ணும்

## 27 அதிகாரம்

1 நாளையத்தினத்தைக் குறித்துப் பெரு
மை பாராட்டாதே, ஒருநாள் பிறப்பிப்ப
2 தை அறியாயே உன் வாய் அல்ல, புறத்தி
யானே உன்னைப் புகழட்டும், உன் உதடு
அல்ல, அந்நியனே உன்னைப் புகழட்டும்
3 கல் கனமும், மணல் பாரமுமாயிருக்
கும் மூடனுடைய கோபமோ இவ்விரண்
டிலும் பாரமாம்
4 உக்கிரம் கொடுமையுள்ளது, கோபம்
நிஷ்டூரமுள்ளது, பொறாமையோவென்
றால், அதற்கு முன்நிற்கத்தக்கவன் யார்?
5 மறைவான சிநேகத்தைப் பார்க்கிலும்
வெளிப்படையான கடிந்துகொள்ளுதல்
6 நல்லது — சிநேகிதன் அடிக்கும் அடிகள்
உண்மையானவைகள், சத்துரு இடும்
முத்தங்களோ வஞ்சனையுள்ளவைகள்
7 திருப்தியடைந்தவன் தேன்கூட்டையும்
மிதிப்பான், பசியுள்ளவனுக்கோ கசப்பா
ன பதார்த்தங்களும் தித்திப்பாயிருக்கும்
8 தன் கூட்டைவிட்டு அலைகிற குருவி
எப்படியிருக்கிறதோ, அப்படியே தன்
ஸ்தானத்தைவிட்டு அலைகிற மனுஷனும்
இருக்கிறான்
9 பரிமளதைலமும் சுகந்த தூபமும்
இருதயத்தைக் களிப்பாக்குவதுபோல,
ஒருவனுடைய சிநேகிதன் உட்கருத்தான
ஆலோசனையினால் பாராட்டும் இன்பமா
னது களிப்பாக்கும்
10 உன் சிநேகிதனையும், உன் தகப்பனு
டைய சிநேகிதனையும் விட்டுவிடாதே
உன் ஆபத்துக்காலத்தில் உன் சகோதர
னுடைய வீட்டிற்குப் போகாதே, தூரத்
திலுள்ள சகோதரனிலும் சமீபத்திலுள்ள
அயலானே வாசி
11 என் மகனே, என்னை நிந்திக்கிறவனுக்
கு நான் உத்தரவு கொடுக்கத்தக்கதாக,
நீ ஞானவானாகி, என் இருதயத்தைச் சந்
தோஷப்படுத்து
12 விவேகி ஆபத்தைக் கண்டு மறைந்து
கொள்ளுகிறான், பேதைகளோ நெடுகப்
போய்த் தண்டிக்கப்படுகிறார்கள்
அந்நியனுக்காகப் பிணைப்படுகிறவனு 13
டைய வஸ்திரத்தை எடுத்துக்கொள், அந்
நிய ஸ்திரீக்காக ஈடுவாங்கிக்கொள்
ஒருவன் அதிகாலையிலே எழுந்து உரத் 14
த சத்தத்தோடே தன் சிநேகிதனுக்குச்
சொல்லும் ஆசீர்வாதம் சாபமாக எண்
ணப்படும்
அடைமழைநாளில் ஓயாத ஒழுக்கும் 15
சண்டைக்காரியான ஸ்திரீயும் சரி - அவளை 16
அடக்கப்பார்க்கிறவன் காற்றை அடக்கித்
தன் வலதுகையினால் எண்ணெயைப்
பிடிக்கப்பார்க்கிறான்
இரும்பை இரும்பு கருக்கிடும், அப் 17
படியே மனுஷனும் தன் சிநேகிதனுடைய
முகத்தைக் கருக்கிடுகிறான்
அத்திமரத்தைக் காக்கிறவன் அதின் 18
கனியைப் புசிப்பான், தன் எஜமானைக்
காக்கிறவன் கனமடைவான்
தண்ணீரில் முகத்துக்கு முகம் ஒத்தி 19
ருக்கும்போல மனுஷரில் இருதயத்
திற்கு இருதயம் ஒத்திருக்கும்
பாதாளமும் அழிவும் திருப்தியாகிறதி 20
ல்லை, அதுபோல மனுஷனுடைய கண்க
ளும் திருப்தியாகிறதில்லை
வெள்ளிக்குக் குகையும் பொன்னுக் 21
குப் புடமும் சோதனை, மனுஷனுக்கு
அவனுக்கு உண்டாகும் புகழ்ச்சியே
சோதனை
மூடனை உரலில் போட்டு உலக்கையி 22
னால் நொய்யோடே நொய்யாகக் குத்தினா
லும், அவனுடைய மூடத்தனம் அவனை
விட்டு நீங்காது
உன் ஆடுகளின் நிலைமையை நன்றாய் 23
அறிந்துகொள், உன் மந்தைகளின்மேல்
கவனமாயிரு — செல்வம் என்றைக்கும் 24
நிலையாது, கிரீடம் தலைமுறை தலைமுறை
தோறும் நிலைநிற்குமோ? — புல் முளைக்கும், 25
பச்சிலைகள் தோன்றும், மலைப்பூண்டுகள்
சேர்க்கப்படும் — ஆட்டுக்குட்டிகள் உன் 26
க்கு வஸ்திரத்தையும், கடாக்கள் வயலை
வாங்கத்தக்க கிரயத்தையும் கொடுக்
கும் — வெள்ளாட்டுப்பால் உன் ஆகாரத் 27
துக்கும், உன் வீட்டாரின் ஆகாரத்துக்கும்,
உன் வேலைக்காரிகளின் பிழைப்புக்கும்
போதுமானபடியிருக்கும்

## 28. அதிகாரம்

ஒருவனும் தொடராதிருந்தும் துன்மா 1
ர்க்கர் ஓடிப்போகிறார்கள், நீதிமான்களோ

கிறது; அவர்களுக்குத் தெரியப்பண்ணக்
24 கடவர்கள் — வழக்கிருந்தால் அவர்கள்
நியாயந்தீர்க்க ஆயத்தமாயிருந்து, என்
நியாயங்களின்படி அதைத் தீர்த்து, என்
னுடைய பண்டிகைகளில் எல்லாம் என்
நியாயப்பிரமாணத்தையும் என் கட்டளை
களையும் கைக்கொண்டு, என் ஓய்வுநாட்
25 களைப் பரிசுத்தமாக்கக்கடவர்கள் — தகப்
பன், தாய், குமாரன், குமாரத்தி, சகோ
தரன், புருஷனுக்கு வாழ்க்கைப்படாத
சகோதரி என்னும் இவர்களுடைய சவத்
தினால் அவர்கள் தீட்டுப்படலாமேயல்
லாமல், அவர்களில் ஒருவனும் செத்த
ஒருவனிடத்தில் போய்த் தீட்டுப்படலா
26 காது அவன் சுத்திகரிக்கப்பட்டபின்பு,
அவனுக்கு ஏழுநாள் எண்ணப்படவேண்
27 டும் — அவன் பரிசுத்த ஸ்தலத்தில் ஆரா
தனை செய்யும்படி பரிசுத்த ஸ்தலமாயிரு
க்கிற உட்பிராகாரத்துக்குள் பிரவேசிக்
கிற நாளிலே, அவன் தனக்காகப் பாவ
நிவாரணபலியைச் செலுத்தக்கடவன்
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்
28 அவர்களுக்குரிய சுதந்தரம் என்னவெ
ன்றால், நானே அவர்கள் சுதந்தரம்
ஆகையால் இஸ்ரவேலில் அவர்களுக்குக்
காணியாட்சியைக் கொடாதிருப்பீர்களாக
29 க, நானே அவர்கள் காணியாட்சி போஜ
னபலியையும் பாவநிவாரணபலியையும்
குற்றநிவாரணபலியையும் அவர்கள் புசிப்
பார்கள், இஸ்ரவேலிலே பொருத்தனை
பண்ணப்பட்டதெல்லாம் அவர்களு
30 டையதாயிருப்பதாக — சகலவித முதற்
கனிகளில் எல்லாம் முதலின பலனும்,
நீங்கள் காணிக்கையாய்ச் செலுத்தும் எல்
லாவிதமான பொருள்களும் ஆசாரியர்களு
டையதாயிருப்பதாக, உங்கள் வீட்டில்
ஆசீர்வாதம் தங்கும்படிக்கு நீங்கள் பிசை
ந்தமாவில் முதற்பாகத்தையும் ஆசாரிய
31 னுக்குக் கொடுக்கக்கடவீர்கள் — பறவை
களிலும் மிருகங்களிலும் தானாய்ச் செத்
ததும் பீறுண்டதுமான ஒன்றையும் ஆசாரி
யர்கள் புசிக்கலாகாது

## 45. அதிகாரம்.

1 நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளும்படி
தேசத்தைச் சீட்டுப்போட்டுப் பங்கிடும்
போது, தேசத்தில் இருபத்தையாயிரங்
கோல் நீளமும், பதினாயிரங்கோல் அகல
முமான பரிசுத்த பங்கைக் கர்த்தருக்கு
அர்ப்பிதமாகப் பிரித்துவைக்கக்கடவீர்
கள், இது தன் சுற்றெல்லை எங்கும் பரி
சுத்தமாயிருக்கும் — இதிலே பரிசுத்த 2
ஸ்தலத்துக்கென்று ஐந்நூறு கோல் நீள
மும் ஐந்நூறு கோல் அகலமுமான நாற்
சதுரம் அளக்கப்படக்கடவது, அதற்குச்
சுற்றிலும் ஐம்பது முழமான வெளிநிலம்
இருக்கவேண்டும் — இந்த அளவு உட்பட 3
இருபத்தையாயிரங்கோல் நீளத்தையும்
பதினாயிரங்கோல் அகலத்தையும் அளப்
பாயாக அதற்குள் பரிசுத்த ஸ்தலமும்
மகா பரிசுத்த ஸ்தலமும் இருக்கவேண்
டும் — தேசத்தில் பரிசுத்த பங்காகிய இது 4
கர்த்தருக்கு ஆராதனைசெய்யச் சேருகிற
வர்களும், பரிசுத்த ஸ்தலத்தில் ஆராதனை
செய்கிறவர்களுமான ஆசாரியருடையது,
இது அவர்களுக்கு வீடுகளுக்கான இட
மும், பரிசுத்த ஸ்தலத்துக்கு அடுத்த
இடமுமாயிருக்கவேண்டும்.
பின்னும் இருபத்தையாயிரங்கோல் 5
நீளமும் பதினாயிரங்கோல் அகலமுமான
இடம் ஆலயத்தின் பணிவிடைக்காரரா
கிய லேவியருடையதாயிருக்கும் அது
அவர்களுடைய காணியாட்சி, அதில் இரு
பது அறைவீடுகள் இருக்கவேண்டும்
பரிசுத்த பங்காகப் படைக்கப்பட்ட 6
தற்கு எதிரே நகரத்தின் காணியாட்சியாக
ஐயாயிரங்கோல் அகலத்தையும் இருபத்
தையாயிரங்கோல் நீளத்தையும் அளந்து
கொடுப்பீர்களாக, அது இஸ்ரவேல் வம்
சத்தார் அனைவருக்கும் சொந்தமாயிருக்
கும்
பரிசுத்த பங்காகப் படைக்கப்பட்ட 7
தற்கும் நகரத்தின் காணியாட்சிக்கும் இந்
தப்புறத்திலும் அந்தப்புறத்திலும், பரி
சுத்த படைப்புக்கு முன்பாகவும், நகரத்
தின் காணிக்கு முன்பாகவும், அதிபதியி
னுடைய பங்கு மேற்கிலே மேற்புறமாக
வும் கிழக்கிலே கிழப்புறமாகவும் இருப்ப
தாக, அதின் நீளம் மேல் எல்லை துவக்
கி கீழ் எல்லைமட்டும் பங்குகளில் ஒவ்
வொன்றுக்கும் எதிராயிருக்கவேண்டும் —
இது அவனுக்கு இஸ்ரவேலிலே காணி 8
பூமியாக இருக்கக்கடவது, என் அதிபதி
கள் இனி என் ஜனத்தை ஒடுக்காமல்
தேசத்தை இஸ்ரவேல் வம்சத்தாருக்கு
அவர்களுடைய கோத்திரங்களுக்குத் தக்க
தாக விட்டுவிடுவார்களாக

9 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது
என்னவென்றால்: இஸ்ரவேலின் அதிபதி
களே, நீங்கள் செய்தது போதும், நீங்கள்
கொடுமையையும் கொள்ளையிடுதலையும்
தவிர்த்து, நியாயத்தையும் நீதியையும் செ
ய்யுங்கள், உங்கள் உத்தண்டங்களை என்
ஜனத்தைவிட்டு அகற்றுங்கள் என்று கர்த்
10 தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். சுமுத்
திரையான தராசும், சுமுத்திரையான மரக்
காலும், சுமுத்திரையான அளவுகுடமும்
11 உங்களுக்கு இருக்கக்கடவது. மரக்கா
லும் அளவுகுடமும் ஒரே அளவாயிருந்து,
மரக்கால் கலத்திலே பத்தில் ஒரு பங்
கும், அளவுகுடம் கலத்திலே பத்தில்
ஒரு பங்கும் பிடிக்கக்கடவது; கலத்தின்
படியே அதின் அளவு நிருணயிக்கப்படுவ
12 தாக. சேக்கலானது இருபது கேரா;
இருபது சேக்கலும் இருபத்தைந்து சேக்
கலும் பதினைந்து சேக்கலும் உங்களுக்கு
ஒரு இராத்தலாகும்.
13 நீங்கள் செலுத்தவேண்டிய காணிக்கை
யாவது: ஒரு கலம் கோதுமையிலே ஒரு
மரக்காலில் ஆறிலொரு பங்கையும், ஒரு
கலம் வாற்கோதுமையிலே ஒரு மரக்கா
லில் ஆறிலொரு பங்கையும் படைக்கக்
14 கடவீர்கள். அளவுகுடத்தால் அளக்கிற
எண்ணெயின் கட்டளையாவது: பத்து அள
குடம் பிடிக்கிற கலத்துக்குச் சரியான
ஒரு ஜாடி எண்ணெயிலே பத்தில் ஒரு
பங்கைப் படைப்பீர்களாக; பத்து அளவு
15 குடம் ஒரு கலமாகும். இஸ்ரவேல் தே
சத்திலே நல்ல மேய்ச்சலை மேய்கிற மந்
தையிலே இருநூறு ஆடுகளில் ஒரு ஆடும்,
அவர்களுடைய பாவநிவாரணத்துக்காகப்
போஜனபலியாகவும் தகனபலியாகவும்
சமாதானபலியாகவும் செலுத்தப்படக்
கடவதென்று கர்த்தராகிய ஆண்டவர்
16 சொல்லுகிறார். இஸ்ரவேலின் அதிபதிக்கு
முன்பாக தேசத்தின் ஜனங்களெல்லா
ரும் இந்தக் காணிக்கையைச் செலுத்தக்
கடனாளிகளாயிருக்கிறார்கள்.
17 இஸ்ரவேல் வம்சத்தார் கூடிவரக்குறிக்
கப்பட்ட சகல பண்டிகைகளிலும் மா
தப்பிறப்புகளிலும் ஓய்வுநாட்களிலும் தக
னபலிகளையும் போஜனபலிகளையும் பான
பலிகளையும் செலுத்துவது அதிபதியின்
மேல் சுமந்த கடனாயிருக்கும்; அவன்
இஸ்ரவேல் வம்சத்தாருக்காகப் பாவ
நிவாரணம் பண்ணும்படிக்குப் பாவநிவா
ரணபலியையும் போஜனபலியையும் தக
னபலியையும் சமாதானபலியையும்
படைப்பானாக.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி 18
றது என்னவென்றால்: முதலாம் மாதம்
முதலாந்தேதியிலே நீ பழுதற்ற ஒரு கா
ளையைக் கொண்டுவந்து, பரிசுத்த ஸ்தலத்
துக்குப் பாவநிவிர்த்தி செய்வாயாக.
பாவநிவாரணபலியின் இரத்தத்திலே கொ 19
ஞ்சம் ஆசாரியன் எடுத்து, ஆலயத்தின்
வாசல் நிலைகளிலும், பலிபீடத்துச் சட்
டத்தின் நாலு கோடிகளிலும், உட்பிராகா
ரத்தின் வாசல் நிலைகளிலும் பூசக்கட
வன். பிழைசெய்தவனுக்காகவும், அறி 20
யாமல் தப்பிதம் செய்தவனுக்காகவும்
அந்தப்பிரகாரமாக ஏழாந்தேதியிலும் செ
ய்வாயாக; இவ்விதமாய் ஆலயத்துக்குப்
பாவநிவிர்த்தி செய்வீர்களாக.
முதலாம் மாதம் பதினாலாந்தேதியிலே 21
புளிப்பில்லாத அப்பம் புசிக்கப்படுகிற
ஏழுநாள் பண்டிகையாகிய பஸ்கா ஆரம்
பமாகும். அந்நாளிலே அதிபதி தன்னி 22
மித்தமும் தேசத்து எல்லா ஜனங்களினி
மித்தமும் பாவநிவாரணத்துக்காக ஒரு
காளையைப் படைப்பானாக. ஏழுநாள் 23
பண்டிகையில், அவன் அந்த ஏழுநாளும்
தினந்தோறும் கர்த்தருக்குத் தகனபலி
யாகப் பழுதற்ற ஏழு காளைகளையும் ஏழு
ஆட்டுக்கடாக்களையும், பாவநிவாரணபலி
யாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்
தினந்தோறும் படைப்பானாக. ஒவ்வொரு 24
காளையோடே ஒரு மரக்கால் மாவும் ஒவ்
வொரு ஆட்டுக்கடாவோடே ஒரு மரக்
கால் மாவுமான போஜனபலியையும், ஒவ்
வொரு மரக்கால் மாவோடே ஒரு படி
எண்ணெயையும் படைப்பானாக. ஏழாம் 25
மாதம் பதினைந்தாந்தேதியில் ஆரம்பமா
கிற பண்டிகையிலே அவன் அப்படியே
ஏழுநாளும் அதற்குச்சரியான பிரகாரமா
கப் பாவநிவாரணபலிகளையும் தகனபலிக
ளையும் போஜனபலிகளையும், எண்ணெயை
யும் படைக்கக்கடவன்.

## 46 அதிகாரம்.

கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி 1
றது என்னவென்றால்: வேலைசெய்கிற ஆறு
நாளிலும் கிழக்குக்கு எதிரான உட்பிராகா
ரத்தினுடைய வாசல் பூட்டப்பட்டிருந்
து, ஓய்வுநாளிலும் மாதப்பிறப்பிலும் திறக்

2 கபபடககடவது — அபபொழுது அதி
பதி வெளிவாசல மணடபததின வழியா
யப பிரவேசிதது, வாசல நிலையணடை
யிலே நிறககககடவன ஆசாரியாகளோ
அவனுடைய தகனபலியையும அவனு
டைய சமாதான பலிகளையும படைகக
கடவாகள அவன வாசறபடியிலே ஆரா
தனை செயது, பினபு புறபபடுவானாக
அநத வாசல சாயஙகாலமடடும பூடடப
3 படாதிருபபதாக — தேசதது ஜனஙகளும
ஓயவுநாடகளிலும மாசபிறபபுகளிலும
அநத வாசலின நடையிலே காததருடைய
சநநிதியில ஆராதனை செயயககடவா
கள
4 அதிபதி ஓயவுநாளிலே காததருககுப
பலியிடும தகனபலி, பழுதறற ஆறு ஆட
டுககுடடிகளும பழுதறற ஒரு ஆடடுக
5 கடாவுமே — ஆடடுககடாவோடே போஜ
னபலியாக ஒரு மரககால மாவையும,
ஆடடுககுடடிகளோடே போஜனபலியா
கத தன திராணிககுத தககதாயத தருகிற
இவையும, ஒவவொரு மரககால மாவோ
டே ஒருபடி எணணெயையும படைக
6 ககடவன — மாதபபிறபபான நாளிலோ,
அவன பழுதறற ஒரு இளஙகாளையையும,
பழுதறற ஆறு ஆடடுககுடடிகளையும, ஒரு
7 ஆடடுககடாவையும பலியிடடு, — போஜ
னபலியாக இளஙகாளையோடே ஒரு மரக
கால மாவையும, ஆடடுககடாவோடே
ஒரு மரககால மாவையும, ஆடடுககுடடி
களோடே தன திராணிககுத தககதாய,
ஒவவொரு மரககால மாவோடே ஒரு
படி எணணெயையும படைககககடவன
8 அதிபதி வருகிறபோது வாசலமண
டபததின வழியாயப பிரவேசிதது, அது வழி
யாயத திருமபப புறபபடககடவன —
9 தேசததின ஜனஙகள குறிககபபடட நாட
களில காததருடைய சநநிதியில வரும
போது, ஆராதனைசெயகிறதறகாக வடககு
வாசலவழியாய உடபிரவேசிததவன தெ
றகு வாசலவழியாயப புறபபடவும, தெ
றகு வாசலவழியாய உடபிரவேசிததவன
வடககு வாசலவழியாயப புறபபடவும
கடவன, தான பிரவேசிதத வாசலவழி
யாயத திருமபிபபோகாமல, தனககு எதி
ரான வழியாயப புறபபடடுபபோவா
10 னாக — அவாகள உடபிரவேசிககுமபோது,
அதிபதி அவாகள நடுவிலே அவாகளோ
டேகூட உடபிரவேசிதது, அவாகள புறப
படுமபோது அவனும கூடப புறபபடுவா
னாக
பணடிகைகளிலும குறிககபபடட கா 11
லஙகளிலும அவன படைககும போஜன
பலியாவது காளையோடே ஒரு மரககால
மாவும ஆடடுககடாவோடே ஒரு மரககால
மாவும, ஆடடுககுடடிகளோடே அவன
திராணிககுத தககதாயத தருகிறதுவும,
ஒவவொரு மரககால மாவோடே ஒருபடி
எணணெயும கொடுககவேணடும — அதி 12
பதி உறசாகமான தகனபலியையாகிலும,
சமாதான பலிகளையாகிலும காததருககு
உறசாகமாயச செலுததவேணடுமென
றால, அவனுககுக கிழககு நோககிய எதி
ரான வாசல திறககபபடுவதாக அபபொ
ழுது அவன ஓயவுநாளில செயகிறது
போல, தன தகனபலியையும தன சமா
தானபலியையும செலுததி, பினபு புறப
படககடவன அவன புறபபடடபினபு வா
சல பூடடபபடவேணடும
தினநதோறும ஒரு வயதான பழுதறற 13
ஒரு ஆடடுககுடடியைக காததருககுத தக
னபலியாகப படைககககடவாய, காலை
தோறும அதைப படைககவேணடும — அ 14
தினோடே காலைதோறும போஜனபலியாக
ஒரு மரககால மாவிலே ஆறததொருபங
கையும, மெலலிய மாவைப பிசையும்ப
டிககு ஒரு படி எணணெயிலே மூனறத
தொரு பஙகையும படைககககடவாய,
இது அனறாடம காததருககுப படைகக
வேணடிய நிததிய கடடளையான போஜ
னபலி — இபபடிக காலைதோறும அன 15
றாடத தகனபலியாக ஆடடுககுடடியையும
போஜனபலியையும எணணெயையும
செலுததுவாாகளாக
காததராகிய ஆணடவா சொலலுகி 16
றது என்னவெனறால அதிபதி தன குமா
ரரில ஒருவனுககுத தன சுதநதரததில
ஒரு பஙகைக கொடுததால, அது அவன
குமாரருடையதாயிருககும, அது சுதநத
ரவீதமாய அவாகளுககுச சொநதமாகும -
அவன தன ஊழியககாரரில ஒருவனுக 17
குத தன சுதநதரததில ஒரு பஙகைக கொ
டுததானேயாகில, அது விடுதலையின வரு
ஷமடடும அவனுடையதாயிருநது, பினபு
திருமப அதிபதியின வசமாயச சேரும,
அதின சுதநதரம அவன குமாரருககே உரி
யது, அது அவாகளுடையதாயிருககும.—
அதிபதியானவன ஜனததை இடுககண 18

செய்து, அவர்களின் சொந்தமானதற்கு
அவர்களைப் புறம்பாக்கி, அவர்களுடைய
சுதந்தரத்திலிருந்து ஒன்றும் எடுக்கலா
காது, என் ஜனத்தில் ஒருவரும் தங்கள்
சொந்தமானதற்குப் புறம்பாக்கப்பட்டுச்
சிதறடிக்கப்படாதபடிக்கு அவன் தன்
சொந்தத்திலே தன் குமாரருக்குச் சுதந்
தரம் கொடுக்கக்கடவன்.
19 பின்பு அவர் வாசலின் பக்கத்தில்
இருந்த நடைவழியாய் என்னை வடக்கு
க்கு எதிரான ஆசாரியர்களுடைய பரிசு
த்த அறைவீடுகளுக்கு அழைத்துக்கொண்
டுபோனார், அவ்விடத்தில் மேற்கே இரு
20 புறத்திலும் ஒரு இடம் இருந்தது — அவர்
என்னை நோக்கி குற்றநிவாரணபலியை
யும் பாவநிவாரணபலியையும் போஜனப
லியையும் ஆசாரியர்கள் வெளிப்பிராகா
ரத்திலே கொண்டுபோய் ஜனங்களைப் பரி
சுத்தப்பண்ணாதபடிக்கு, அவர்கள் அவை
களைச் சமைக்கிறதற்கும் சுடுகிறதற்குமான
21 ஸ்தலம் இதுவே என்றார் — பின்பு அவர்
என்னை வெளிப்பிராகாரத்தில் அழைத்துக்
கொண்டுபோய், என்னைப் பிராகாரத்தின்
நாலு மூலைகளையும் கடந்துபோகப்பண்
ணினார், பிராகாரத்து ஒவ்வொரு மூலையி
லும் ஒவ்வொரு முற்றம் இருந்தது —
22 பிராகாரத்தின் நாலு மூலைகளிலும் புகைத்
துவாரங்களுள்ள இந்த முற்றங்கள் நாற்
பது முழ நீளமும், முப்பது முழ அகல
முமானவைகள், இந்த நாலு மூலை முற்
றங்களுக்கும் ஒரே அளவு இருந்தது —
23 இந்த நாலுக்கும் சுற்றிலும் உள்ளே ஒரு
சுற்றுக்கட்டு உண்டாயிருந்தது, இந்தச்
சுற்றுக்கட்டுகளின் சுற்றிலும் அடுப்புகள்
24 போடப்பட்டிருந்தது — அவர் என்னை
நோக்கி இவைகள் ஜனங்கள் இடும் பலி
களை ஆலயத்தின் பணிவிடைக்காரர் சமை
க்கிற வீடுகள் என்றார்.

## 47 அதிகாரம்

பின்பு அவர் என்னை ஆலயத்தின் வாச
லுக்குத் திரும்பிவரப்பண்ணினார், இதோ,
வாசற்படியின் கீழிருந்து தண்ணீர் புறப்
பட்டுக் கிழக்கே ஓடுகிறதாயிருந்தது,
ஆலயத்தின் முகப்பு கிழக்கு நோக்கியிரு
ந்தது, அந்தத் தண்ணீர் ஆலயத்தின் வல
துபுறமாய்ப் பலிபீடத்துக்குத் தெற்கே
2 பாய்ந்தது — அவர் என்னை வடக்கு வாச
லவழியாய்ப் புறப்படப்பண்ணி, என்னை
வெளியிலே கீழ்த்திசைக்கு எதிரான புற
வாசல்மட்டும் சுற்றி நடத்திக்கொண்டு
போனார், அங்கே தண்ணீர் வலதுபுறத்தி
லிருந்து பாய்கிறதாயிருந்தது.
அந்தப் புருஷன் தமது கையில் நூலைப்
பிடித்துக்கொண்டு, கிழக்கே புறப்படுகை
யில் ஆயிரம் முழம் அளந்து, என்னைத் தண்
ணீரைக் கடக்கப்பண்ணினார், தண்ணீர்
கணுக்கால் அளவாயிருந்தது — பின்னும் 4
அவர் ஆயிரம் முழம் அளந்து, என்னைத்
தண்ணீரைக் கடக்கப்பண்ணினார், அங்
கே தண்ணீர் முழங்கால் அளவாயிருந்
தது, பின்னும் அவர் ஆயிரம் முழம் அளந்து
என்னைக் கடக்கப்பண்ணினார், அங்கே
தண்ணீர் இடுப்பளவாயிருந்தது — பின் 5
னும் அவர் ஆயிரம் முழம் அளந்தார், அங்
கே அது நான் கடக்கக்கூடாத நதியாயிருந்
தது, தண்ணீர் நீச்சாழமும் கடக்கமுடி
யாத நதியுமாயிருந்தது.
அவர் என்னை நோக்கி மனுபுத்திரனே, 6
இதைக் கண்டாயா என்று சொல்லி,
என்னை நதியோரமாய்த் திரும்ப நடத்திக்
கொண்டுபோனார் — நான் நடந்துவருகை 7
யில், இதோ, நதியோரத்தில் இக்கரையி
லும் அக்கரையிலும் வெகுதிரளான விருட்
சங்கள் இருந்தது — அவர் என்னை நோக் 8
கி இந்தத் தண்ணீர் கிழக்குத்தேசத்துக்
குப் புறப்பட்டுப்போய், வனாந்தரவழி
யாய் ஓடி கடலில் விழும், இது கடலில்
பாய்ந்து, விழுந்தபின்பு, அதின் தண்ணீர்
ஆரோக்கியமாகும் — சம்பவிப்பது என் 9
னவென்றால், இந்த நதி போகுமிடமெங்
கும் சஞ்சரிக்கும் ஜீவபிராணிகள் யாவும்
பிழைக்கும், இந்தத் தண்ணீர் அங்கே
வந்தபடியினாலே வெகு ஏராளமான மச்சங்
களும் உண்டாயிருக்கும், இந்த நதி போ
குமிடமெங்குமுள்ள யாவும் ஆரோக்கி
யப்பட்டுப் பிழைக்கும் — அப்பொழுது 10
என்கேதிமுதல் எனெக்லாயீம்மட்டும்
மீன்பிடிக்கிறவர்கள் அதின் கரையிலே
நிற்பார்கள், அதெல்லாம் வலைகளை விரிக்
கிற ஸ்தலமாயிருக்கும், அதின் மச்சங்கள்
பெரிய சமுத்திரத்தின் மச்சங்களைப்போ
லப் பல ஜாதியும் மகா ஏராளமுமாயி
ருக்கும் — ஆனாலும் அதினுடைய உளை 11
யான பள்ளங்களும் அதினுடைய மடுக்க
ளும் ஆரோக்கியமாகாமல், உப்பாகவே
விட்டுவிடப்படும் — நதியோரமாய் அதின் 12
இக்கரையிலும் அக்கரையிலும் புசிப்புக்

